Regd. No. 2975

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் - 332

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

# SRI RAMANUJAN

Editor:

*Mahamahimopadhyaya*

**P. B. ANNANGARACHARYA**, KANCHIPURAM-631503

வருஷச் சந்தா ரூ. 10 ஜீவியச் சந்தா ரூ. 100

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஸ்ரீமதெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி*
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

1976 பிப்ரவரி, மாசிமீ

ஸ்ரீ:

# முக்கியமான அறிக்கைகள் மூன்று

1. திருச்செங்கனூரில் 26—1—76ல் நடைபெற்ற பெரிய வாச்சான்பிள்ளை ஸம்ப்ரோக்ஷணத்திற்கு முன்னடி இந்த ஸஞ்சிகையை வெளியிடுவதாக உத்தேசித்து அந்த ஸம்ப்ரோக்ஷண மஹோத்ஸவத்திற்கான அழைப்பும் இவ்விதழில் வெளியிடப்பட்டுள்ளது. ஆனல் உத்தேசப்படி காலத்தில் இச்சஞ்சிகையை வெளியிட முடியவில்லை. ஆனலும் முதல் பன்னிரண்டு பக்கங்களைமட்டும் காலத்தில் சில திவ்யதேச வாஸிகளான பெரியார்களுக்குக் கிடைக்கும்படி செய்தோம். குறிப்பிட்ட ஸம்ப்ரோக்ஷண மஹோத்ஸவம் விளம்பரத்தில் கண்டபடி வெகுவிபவமாக நடைபெற்றது. ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசாரியர்களான திருமலை திருப்பதி பெரிய ஜீயர்ஸ்வாமி, கோயில் ஸ்ரீரங்கநாராயண ஜீயர் ஸ்வாமி, ஸ்ரீமதுபயவே. கோயில் அரையர்ஸ்வாமி மற்றும் அத்யாபகர்கள், வேதம் வல்லவர்கள், ஸ்ரீ பாஷ்ய பகவத் விஷயாதிகாரிகள், உபந்யாஸகர்கள் ஆகிய ஸ்ரீ வைஷ்ணவ ஸ்வாமிகள் இருநூறு திருநாமங்களுக்கு மேற்படவே ஸேவை ஸாதித்தருளினர்கள். எந்த விதத்திலும் ஒரு குறையுமின்றி லோகோத்தரமான முறையில் நடைபெற்றது. சாத்துமுறை தினத்தில் திருவெள்ளியங்குடி யெம்பெருமான் எழுந்தருளியிருந்து மஹோத்ஸவத்தைச் சிறப்பித்தருளினது விசேஷித்துக் குறிப்பிடத்தக்கது.

## 2. மற்றோர் அறிக்கை

நமது ஸ்ரீராமாநுஜன் 850 பிரதிகள் மட்டுமே வெளியேறுகின்றன. ஆப்தர்கள் வித்வான்கள் என்கிற முறையில் 250 நபர்களுக்கு இனமாக அனுப்பப்பட்டு வருகின்றது. அறுநூறு நபர்கள் சந்தாதாரர்களாகக் கருதப்படுகிறார்கள். இவர்களில் எத்தனை பேர்கள் ஒழுங்காகச் சந்தா செலுத்திவருகிறார்களென்பதைத் தெரிவிக்க ஸங்கோசிக்கிறோம். சந்தா செலுத்துபவர்களின் பெயர்களை ஸஞ்சிகை தோறும் பிரசுரித்து வந்தோம். ஒவ்வொரு மாதத்திலும் இருவர் மூவரே செலுத்திவருவதால் ஸங்கோசத்தினலேயே பெயர் வெளியிடுவதை நிறுத்தியிருக்கிறோம். அவரவர்களுக்கு நாம் தனித்தனியே கடிதம் எழுதக் கருதவில்லை. இக்காலத்தில (Printing Paper) காகிதத்தின் விலையும் (Printing Charge) அச்சுக் கூலியும் ஏறியிருப்பதை அறியாதாரில்லை. அவரவர்கள் விரைவில் சந்தா பாக்கியை யனுப்பித்தர வேணுமென்று கேட்டுக் கொள்ளுகிறோம்.

இப்படிக்கு:
மானேஜர், க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்-3:

## 3. காலக்ஷேப அறிவிப்பு

சின்ன காஞ்சீபுரம் கீழண்டை மாடவீதியிலுள்ள நமது வேத வேதாந்த வையஜந்தீ கலாசாலையில் 21—1—1976 முதல் நாடோறும் பகவத்கீதாபாஷ்ய காலக்ஷேபம் நடைபெற்று வருகிறது. (நேரம் காலை 7-30 முதல் 9-00 வரையில்.) ஸ்ரீமான் உ. வே. வித்வான் தி. அ. அக்காரக்கனி ஸம்பத்குமாராசாரியர் ஸ்வாமி அனைவர்க்கும் விளங்கும்படி எளிய நடையில் ஸாதித்து வருகிறார். விருப்பமுள்ளவர்கள் வந்து கேட்டு மகிழலாம். (பத்ராதிபர்) ... ...

# ஸ்ரீ ராமாநுஜன் - 332



ஆசிரியர்:
மஹாமஹோபாத்யாய ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர்.

ஸம்புடம் 28 | ராக்ஷஸஹ தைமாதத் தனிமலர் 25—1—76 | ஸஞ்சிகை 8


## பெரியவாச்சான் பிள்ளை ஸ்ரீநிவாஸப்பெருமாள் மஹா ஸம்ப்ரோக்ஷணப் பிரகடனம்

திவ்யப்ரபந்த வியாக்கியான சக்ரவர்த்தியென்று புகழ்பெற்ற பெரியவாச்சான்பிள்ளையின் திருவவதாரஸ்தலம் திருக்குடந்தை ஸமீபத்தில் விளங்கும் திருச்சேங்கநல்லூர் என்று ப்ரஸித்தமானது திருவெள்ளியங்குடிக்கு மிக அருகிலுள்ளதுமாம். திருச்செங்கனூர் என வழங்குமித்தலத்தில் ஸ்ரீநிவாஸப் பெருமாள் ஸன்னிதியும் பெரியவாச்சான் பிள்ளை ஸன்னிதியும் பலவாயிரம் ரூபாய் செலவில் செப்பனிடப்பெற்று ஜீர்ணோத்தாரணத்திருப்பணி ஒருவாறு முடிவு பெற்றுள்ளது. நிகழும் ராக்ஷஸஹ தைமீ 9உ வெள்ளிக்கிழமை (23—1—76) அன்று மஹா ஸம்ப்ரோக்ஷணச் சடங்குகள் தொடங்கப்பட்டு 12உ திங்கட்கிழமை (26—1—76) காலை 7 மணி முதல் 11 மணியளவில் பூர்த்தியாகும்படி நிச்சயிக்கப்பட்டுள்ளது. உபயவேத வேதாங்க ஸ்ரீபாஷ்ய பகவத்விஷயாதி பாராயணங்களுடன் வித்வான்களின் உபந்யாஸங்களுடனும் ஹரிகதாகாலக்ஷேப ஸங்கீதக்கச்சேரிகளுடனும் விசேஷவைபவம் பொலிய நடைபெறமிந்த மஹாஸம்ப்ரோக்ஷணமஹோத்ஸவம் ஆஸ்திக ஸ்ரீவைஷ்ணவர்களெவர்க்கும் பரமபோக்யமாக அநுபவிக்கத்தக்கது.

இவ்வரியபெரிய மஹோத்ஸவஸந்தர்ப்பத்தில் அடியேன் ஸஹ்ருதய ஸஹ்ருந்மணிகளோடு உடன்கூடியிருந்து அநுபவித்து ஆநந்திக்கக் குதூஹலங்கொண்டிருந்தும் தேஹ ஶக்திக்குறைவினால் பாக்யஹீநனாயிராநின்றேன். அந்த தௌர்ப்பாக்யத்தை ஒருவாறு தவிர்த்துக் கொள்ள நினைத்து, பெரியவாச்சான் பிள்ளை வைபவத்தை (அடுத்த பக்கத்திலிருந்து) மூன்று படியாக உலகுக்கு உபஹரிக்கின்றேன். கண்ணபிரானுடைய திருநாமத்தைக் கொண்ட பெரியவாச்சான் பிள்ளைக்கும் கண்ணனுக்கும் ஶ்லேஷஸங்கியாலே ஸாம்யத்தை நிர்வஹித்து ஒரு ச்லோகமும், வசன நடையில் பெரியவாச்சான் பிள்ளை வைபவச் சுருக்கமும், ஸ்வாமி திருவாய்மொழிக்கு இருபத்துநாலாயிரப்படி வியாக்கியானமருளிச் செய்ததற்கு அறிகுறியாக இருபத்துநான்கு சுலோகங்கள் கொண்ட ஸ்துதி நூலொன்றையும் பக்தர்களுக்கு ரஸாயனமாக ஈண்டு உபஹரித்துள்ளேன். குற்றங்களைந்து நற்றங்கொண்டு ரஸிக பக்த சிகாமணிகள் அநுபவித்து மகிழ்வாராக. ... ...

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

ஸ்ரீமத் க்ருஷ்ணஸமாஹ்வரான பெரியவாச்சான்பிள்ளைக்கும்

ஸ்ரீக்ருஷ்ணபகவானுக்கும் ஸாம்யநிர்வாஹகமான

சுலோகமொன்று—உரையுடன்கூடியது.

(ஸ்ரீகாஞ்சீ. ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் விஜ்ஞாபித்தது.)

(சுலோகம்)

ரோஹிண்யருக்ஷோத்பவத்வாத் ப்ரதிதமஹிதகீதார்த்தரத்நப்ரதத்வாத்

பூயிஷ்டாபார்த்தஸங்காத் புவநகுருபதாஸஞ்ஜநாத் தீர்த்தஸங்காத் 1

கோபாலத்வப்ரஸித்தே: நரகசமநதச் சாஸ்த்ரத்வம்ஸகத்வாத்

ஹந்த்ருத்வாஜ் ஜிஹ்மசீநாம் ப்ரபஜதி துலநாம் க்ருஷ்ணஸூரிர் முராரே: ll

(இதன் சுருக்கமான பொருள்விளக்கம் வருமாறு)

1. **ரோஹிண்யருக்ஷோத்பவத்வாத்**—ருக்ஷமாவது நக்ஷத்திரம். ரோஹிணீ நக்ஷத்திரத்தில் அவதரித்தமை கண்ணபிரானுக்கும் பெரியவாச்சான்பிள்ளைக்குமொக்கும் இருவரும் ஆவணி மாதத்து ரோஹிணீ நக்ஷத்திரத்தில் திருவவதரித்தவர்களிறே. பெரியாழ்வார் திருமொழியில்* *நீபிறந்த திருவோணமின்று* என்றும் *திண்ணார் வெண்சங்குடையாய்! திருநாள் திருவோணமின்றேழுநாள்* என்றுமுள்ள பாசுரங்களினால் கண்ணபிரான் திருவவதரித்த நக்ஷத்திரம் திருவோணம் என்பதாக விளங்காநின்றதே யென்று இங்கே ஒரு சங்கைதோன்றும்; அதற்குப் பரிஹாரமாவது- வேதத்தில் *ச்ரோணா நக்ஷத்ரம் விஷ்ணுர் தேவதா* என்று ஓதியிருக்கையாலே 'விஷ்ணு நக்ஷத்ரம் திருவோணம்' என்கிற ப்ரஸித்தியைக்கொண்டு அங்ஙனே யருளிச் செய்தபடி. ஸ்ரீந்ருஸிம்ஹாவதாரம் ஸ்வாதீ நக்ஷத்ரத்தில் என்றிருக்கச் செய்தேயும், திருப்பல்லாண்டில் *திருவோணத் திருவிழவிலந்தியம் போதிலரியுருவாகி* என்றருளிச்செய்திருப்பது இங்கு ஒப்புநோக்கத்தக்கது. ஆக, ரோஹிண்யருக்ஷோத்பவத்வத்தினால் ஸ்ரீக்ருஷ்ண க்ருஷ்ணஸூரிகளுக்கு ஸாம்யம் குறையற்றது.

2. **ப்ரதித மஹித கீதார்த்தரத்நப்ரதத்வாத்*** ப்ரதித—ப்ரஸித்தமாயும், மஹித—சிறந்ததாயுமுள்ள, கீதா—பகவத்கீதாசாஸ்த்ரத்திலுள்ள, அர்த்தரத்நப்ரதத்வாத்—அர்த்தரத்னங்களையளித்ததனாலே — என்று ஸ்ரீ க்ருஷ்ணபக்ஷத்தில் பொருள் காண்க. *அறிவினால் குறைவில்லா அகல்ஞாலத்தவரறிய நெறியெல்லாமெடுத்துரைத்த நிறைஞானத்தொருமூர்த்தி* என்ற திருவாய்மொழிப்பாசுரப்படியே கீதாசாஸ்த்ர முகத்தாலே சீரிய பொருள்களை வெளியிட்டருளினவன் கண்ணபிரான். ஆசிரியர் பக்ஷத்தில், **ப்ரதித மஹித கீத**—ப்ரஸித்தர்களான மஹான்களாலே கொண்டாடப்பட்ட, சிறந்த அருளிச்செயற்பொருள்களை உபகரித்தருளினபடியாலே—என்று பொருள்காண்க. உபதேசரத்தினமாலையில் * பெரியவாச்சான் பிள்ளை பின்புள்ளவைக்குந் தெரிய, வியாக்கியைகள் செய்வால்—அரியவருளிச் செயற்பொருளை ஆரியர்கட்கிப்போது, அருளிச்செயலாய்த் தறிந்து* என்றருளிச்

செய்தபடி திருவாய்மொழிக்கு இருபத்து நாலாயிரப்படியருளிச்செய்ததுமட்டுமன்றிக்கே மற்ற மூவாயிரத்துக்கும் வியாக்கியானமருளிச் செய்து அதனால் உபய வேதாந்த ஸாரார்த்தங்களையும் வெளியிட்டருளின பெருமை பெரியவாச்சான் பிள்ளைக்கு அஸாதாரணமன்றோ.

3. பூயிஷ்டாபார்த்தஸங்காத்-*பார்த்தஸம்பந்தத்தாலே பாண்டவர்களைச் சொல்லி, பார்த்தேதரர்களான கௌரவர்களை அபார்த்தஸம்பந்தத்தாலே கொண்டு, பூயிஷ்டர்களான அபார்த்தர்களை பங்கம் செய்தவன் கண்ணபிரான்—*மலைபுரை தோள்மன்னவரும் மாரதரும் மற்றும் பலர் குழிய நூற்றுவரும் பட்டழியச் செய்தவன் கண்ணன் என்று பொருள்காண்க. ஆசிரியர் பக்ஷத்தில்—பூயிஷ்டாநாம் அபார்த்தாநாம் ஸங்காத்—உபய வேதாந்தங்களிலும் பிறர் சொல்லிப்போரும் அபார்த்தங்களுக்கு இடமறும்படி செய்தருளினவரென்று பொருள்காண்க. சாஸ்த்ரங்களின் உண்மைப் பொருள்களைத் தமது திவ்யஸூக்திகளினால் நிலைநாட்டியருளினவரிறே பெரியவாச்சான் பிள்ளை.

4. புவந குரு பதாஸஞ்ஜநாத். ஸ்ரீவசநபூஷணத்தில் “ஈச்வரன் தானும் ஆசார்யத்வத்தை ஆசைப்பட்டிருக்கும்; ஆகையிறே ஸ்ரீ கீதையும் அபயப்ரதாநமுமருளிச் செய்தது” என்றருளிச் செய்தபடியும், முகுந்தமாலையில் “ஹே ஜகத் த்ரய குரோ! ஹே புண்டரீகாக்ஷ!” என்றருளிச் செய்தபடியும், *தேவகீபரமாநந்தம் க்ருஷ்ணம் வந்தே ஜகத் குரும்* என்ற ஸுப்ரஸித்தச்லோகப்படியும் ஜகத்குருபதவியையடைந்தவன் கண்ணபிரான். (பத) என்றது பதவியென்றபடி. ஆசிரியர் பக்ஷத்தில்—ஆத்ய லோகாசார்யரென்று புகழ்பெற்று (புவநகுருவான) நம்பிள்ளையின் திருவடிகளை ஆச்ரயித்தவர் என்று பொருள்காண்க.

5 தீர்த்தஸங்காத் -*யமுனைத்துறைவனை கண்ணபிரானுக்கு யமுநா தீர்த்த ஸங்கம் இடையறாததன்றோ. ஆசிரியர்க்கும் யாமுந ஸம்பந்தம் நித்யமாகவுள்ளது. *ஸ்ரீமத் க்ருஷ்ணஸமாஹ்வாய நமோ யாமுநஸூநவே* என்றிறே பெரியவாச்சான் பிள்ளை தனியன். யாமுநாசார்யபுத்ரரத்னமென்றதாயிற்று.

6. கோபாலத்வப்ரஸித்தே: *ஆநிரைமேய்த்துக் கோபாலனென்று ப்ரஸித்தமான திருநாமமுடையவன் கண்ணபிரான். ஆசிரியர்பக்ஷத்தில் (கௌ) (கோ) என்பது ஸ்ரீஸூக்திவாசகம். *யத்கோஸஹஸ்ரமபஹந்தி தமாம்ஸி பும்ஸாம்* இத்யாதி ச்லேஷஸ்தலங்கள் காண்க. உபதேசரத்தினமாலையில் *பிள்ளான் நஞ்சீயர் பெரியவாச்சான்பிள்ளை......திருவாய்மொழியைக் காத்த குணவாளர் என்றருளிச் செய்தபடி திருவாய்மொழியாகிற ஸ்ரீஸூக்தியை (வ்யாக்யாநமுகேந) காத்தருளினவர்.

7. நரகஸம்பந்த:—*நரகாஸுரனைத் தொலைத்தருளினவன் கண்ணபிரான். ஆசிரியர் தம் திருவடி பணிந்தவர்களை நரகம் புகாமே வீடுபெறுத்தி உய்வித்தவர்.

8. ஆஸுரத்வம்ஸகத்வாத்—¤தேனுகன் பிலம்பன் காளியனென்னுந் தீப்பப்பூடுகளடங்கவுழக்கி¤ என்கிறபடியே ஆஸுரப்ரக்ருதிகளை யெல்லாமொழித்தவன் கண்ணபிரான். ஆசிரியர் பக்ஷத்தில்—“த்வௌ பூதஸர்க்கௌ லோகேஸ்மிந் தைவ ஆஸுர ஏவ ச, தைவீ ஸம்பத் விமோக்ஷாய நிபந்தாயாஸுரீ மதா.” என்ற கீதா

ஸூக்திப்படியும், ☼அரக்கரசுரர் பிறந்தீருள்ளீரேல்☼ என்கிற திருவாய்மொழிப் பாசுரப்படியும் முமுக்ஷுக்களல்லாதாரான ஆஸுரப்ரக்ருதிகளை யொழித்தவர் என்று கொள்க.

9. ஜிஹ்மகாநாம் ஹந்த்ருத்வாத்-ஜிஹ்மகஸப்தம் ஸர்ப்பத்திற்கும், கோணலான நடத்தையுடையவர்களுக்கும் வாசகம். கண்ணபிரான் காளியநாக மொன்றின் கொழுப்பை யடக்கினவன். ஆசிரியர் வக்ரகதிகளானவரெல்லாரையும் செருக்கடக்கி நல்வழிப்படுத்தினவர்.

ஆக இவ்வொன்பது வகைகளாலே [க்ருஷ்ணஸூரி: முராரே: துல்யதாம் ப்ரபேதே]—க்ருஷ்ணஸூரியென்று திருநாமம் பெற்றவரான பெரியவாச்சான் பிள்ளை க்ருஷ்ண பகவானுடைய ஸாம்யத்தைப் பெற்றிருக்கின்றாரென்றதாயிற்று. ... ... *

பெரியவாச்சான் பிள்ளை திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

# பெரியவாச்சான் பிள்ளை வைபவச் சுருக்கம்

—பெரியவாச்சான் பிள்ளை தனியன்—

ஸ்ரீமத் க்ருஷ்ண ஸமாஹ்வாய நமோ யாமுநஸூநவே,
யத்கடாக்ஷைகலக்ஷ்யாணாம் ஸுலப: ஸ்ரீதரஸ் ஸதா:.

ஆவணி மாதத்து ரோஹிணி நக்ஷத்திரத்தில் பூர்வசிகி ஸந்நதியில் திருவவதரித்தவர் பெரிய வாச்சான்பிள்ளை. இவ்வாசிரியருடைய சரித்திர வரலாறுகளைப் பற்றி விசேஷமாக அறியப் பெறுகின்றிலோம். இவர் தம்மால் உலகுக்கு விளைந்த மஹோபகாரம் அபரிமிதமாதலால் அதைப்பற்றியே சிறிது பேசுவோம். ஆழ்வார்களின் அருளிச் செயல்களுக்கெல்லாம் மிகச் சிறந்த வியாக்கியானமும், ஸ்தோத்ர ரத்நாதி வியாக்கியானங்களும் இவரருளிச் செய்தவை இவருடைய அப்ரதிமமான பாண்டித்யத்தையும் அப்ரமேயமான மேதாவிலாஸத்தையும் நன்கு புலப்படுத்துகின்றன. வடக்குத் திருவீதிப் பிள்ளையுமிவரும் நம்பிள்ளை திருவடிகளில் ஸப்ரஹ்மசாரிகளாக வாழ்ந்து ஸகலார்த்தங்களையும் ஸார்வபௌமமறக் கற்றவர்கள். நம்பிள்ளை ஸகல சாஸ்த்ரங்களையும் வரிசையடைவே அதிகரித்து அந்தப் பாண்டித்யம் முழுவதையும் அருளிச்செயற் பொருளுபந்யாஸங்களிலே உபயோகப் படுத்தி வந்தாரென்பது ப்ரஸித்தம். அவ்வண்ணமாகவே இவ்வாசிரியரும் ஸகல சாஸ்த்ரஜ்ஞராகித் தமது ஞான விளக்கத்தை வியாக்கியானங்களருளிச் செய்வதில் வெகு அழகாகச் செலுத்தி இவ்வுலகுக்கு மஹோபகாரகர்களில் தலைமை ஸ்தானம் பெற்றருளினர்.

மதாந்தரஸ்தர்களில் பட்டபாஸ்கரரும் வித்யாரண்யரும் வேதபாஷ்யங்களை விபுலமாகவெழுதிப் புகழ்பெற்றவர்களேயானாலும் அந்த பாஷ்யங்களானவை பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானங்களின் முன்னிலையில் பகல் விளக்கும் மின்மினியுமாயிருக்கும். அந்த வேத பாஷ்யங்கள் சுமை சுமையாக இருந்தாலும் இன்னது சொல்லிற்றென்று ஒருவர்க்குமறியப்போகாது; மூலத்தில் ரஸமிருந்தாலன்றோ பாஷ்யத்தில் ரஸங்காண முடியும். காடு பரந்த கர்ம காண்டங்கள் கர்மநிஷ்ணாதர்

களுக்குமுபயோகமற்றவை யாயுள்ளன. ஆயினும் அந்தணர்களாய்ப் பிறந்தவர்கள் வேதமோதியே யாகவேண்டும். பகவத் குண ரஸிகர்களுக்கு அவை கொண்டு பயனொன்று மில்லையே. அப்படியன்றிக்கே த்ராவிட வேத பாஷ்ய காரரான பெரியவாச்சான்பிள்ளையின் ஸ்ரீஸூக்தி ஒவ்வொன்றும் பகவத் குணாநுபவத்தாலல்லது போது போக்கவறியாத முமுக்ஷுக்களுக்கு ரஸாயநமாயிருக்கும்.

பகவத் விஷயத்தில் சேராமல் பாஹ்ய விஷயங்களைப் பற்றிப் பேசினாலுங்கூட பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியானம் மிகமிக அதிசயிக்கத் தக்கதாயிருக்கும். அத்தகைய விஷயங்களில் ஒன்றே இங்கெடுத்துக் காட்டுவோம். பெரிய திருமொழியில் திருநறையூர் விஷயமான நூறுபாசுரங்களுள் (6—7—4) *மென் மலர் மேல் களியா வண்டு கள்ளுண்ணக் காமர் தென்றல் அலர் தூற்ற, நளிர் வாய் முல்லை முறுவலிக்கும் நறையூர்* என்பது ஒருபாசுரம்; இது ஸாதாரணமாகச் சோலைகளில் நடக்குஞ் செய்தியைச் சொல்லுவது. வண்டுகள் மதுபானம் பண்ணுவதும் தென்றற்காற்று தூற்றுவதும் முல்லை வாய்திறப்பதுமான ஸம்பவம் சொல்லியிருக்கிறவிது ஸ்வபாவோக்தி. ஆனாலும் இங்குச் சொற்சேர்க்கையமைந்த அழகை நோக்கிப் பெரியவாச்சான் பிள்ளை தமது வியாக்கியானத்தில் அருளிச் செய்திருப்பதாவது. "[மென் மலர் மேலித்யாதி.] கண்டவிடமெங்கும் பரப்புமாறப் பூத்துக் கிடக்குமிறே; அதிலே மதுபாநார்த்தமாகக் கிட்டின வண்டுகள் அத்தைக் கிட்டப்பெற்ற ஹர்ஷத்தாலே களித்து நிஷித்த ஸேவை பண்ணுவாரைப் போலே மதுபானத்தைப் பண்ணிற்றின. அதைக் கண்ட தென்றல் நாட்டிலே பழியைத் தூற்றிற்று. அத்தைக் கண்ட முல்லை, புகுந்த ப்ரமாதத்தை யநுஸந்தித்து 'அது தான் அப்படி செய்கிறது, இதுதான் இப்படி செய்யக்கடவதோ வென்று வாய் விட்டுச் சிரிக்க மாட்டாமை ஸ்மிதம் பண்ணிற்று" என்று;—இதனை நாமே விவரிப்போம். வண்டு கள்ளுண்டதாகவும், தென்றல் அலர் தூற்றினதாகவும், முல்லை முறுவலித்ததாகவும் மூலத்திலுள்ளது. 'அலர் தூற்றுதல்' என்னுஞ் சொல்லுக்குப் புஷ்பங்களைத் தூற்றுதலென்கிற பொருளேயல்லாமல் பழிதூற்றுதலென்கிற பொருளுமுண்டாதலால் அதைக் கொண்டு ரஸோக்தியாக இங்கு வியாக்கியானம் செய்தருளுகிறபடி. வண்டு என்று ஒரு ஸ்ரீவைஷ்ணவனைச் சொன்னபடியாய், அவன் ஏதோ விதிவசத்தால் கள்ளுண்ண நேர்ந்துவிட்டதாய்; அதைக் கண்டவொருவன், கள்ளுண்டான் கள்ளுண்டானென்று நாட்டிலே பழி தூற்றப் புறப்பட்டானும்; இவ்விரண்டையுங் கண்டவொரு சுத்தஸாத்விகன், ஏதோ விதி வசத்தால் ஒருவன் ஒருகால் மதுபானம் பண்ண நேர்ந்துவிட்டால் அதைப்பற்றி இப்படியும் ஒருவன் பழி தூற்ற வேணுமோ? இவ்விருள் தருமாஞாலத்தில் இது ஸஹஜந்தானே யென்று வாளாவிருக்கலாகாதோவென்று அஹஹ! வாய்விட்டுச் சிரிக்கமாட்டாமல் இவை யென்ன வுலகியற்கை!' என்று புன் சிரிப்புச் செய்கிறானும். எப்படிப்பட்ட அதிகாரிக்கும் ஒரு நிஷித்த காரியஞ் செய்யநேர்ந்து விடுவது ஸஹஜமென்றும், அதைப் பற்றி யொருவன் பழி தூற்ற நேருவதும் ஸஹஜமென்றும், இதுவொரு ப்ரமாதமா? இதைப் பழி தூற்றவேணுமா?' என்று சில மஹான்கள் நினைப்பதுண்டென்றும் லௌகிக ஸந்நிவேச மூணர்த்தியதாக வியாக்கியானங்கண்டது விலக்ஷண மேதா

விலாஸம். இஃது ஓர் எடுத்துக் காட்டாக ஈண்டமைக்கப்பட்டது. அத்யாத்ம சாஸ்த்ரார்த்தங்கள் அபரிமிதமாகக்காண்பதோடு இத்தகைய லௌகிக வாச்விந்யா ஸங்களும் விபுலமாகக்காணப்படும் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானங்களில்.

திவ்யப்பிரபந்தங்களுக்கு வியாக்கியானமிட்டருளுந் திருப்பணியில் மற்றுஞ் சில ஆசாரியர்களும் கை வைத்ததுண்டு. ஆனால் பூர்த்தியாக நாலாயிரத்திற்கும் வியாக்கியானமிட்டருளினவரென்னும் பெருமை இவ்வாசிரிய ரொருவர்க்கே அஸாதாரணமாக அமைந்ததாகும். இவ்விஷயம் உபதேச ரத்தின மாலையில் "பிள்ளான் நஞ்சீயர் பெரியவாச்சான் பிள்ளை, தெள்ளார் வடக்குத் திருவீதிப்பிள்ளை, மணவாள யோகி திருவாய்மொழியைக் காத்த, குணவாளரென்று நெஞ்சே கூறு" "நஞ்சீயர் செய்த வியாக்கியைகள் நாலிரண்டுக்கு, எஞ்சாமை யாவைக்கு மில்லையே, தஞ்சீரால் வைய குருவின் தம்பி மன்னுமணவாள முனி, செய்யுமவை தாமுஞ்சில". "பெரியவாச்சான் பிள்ளை பின்புள்ளவைக்குந்தெரிய, வியாக்கியைகள் செய்வால். அரிய அருளிச்செயல்பொருளை ஆரியர்கட்கிப்போது, அருளிச் செயலாய்த்தறிந்து" என்ற பாசுரங்களினாலுமுணரத்தக்கது பெரியாழ்வார் திருமொழியில் நானூறு பாசுரங்களுக்கு மாத்திரம் இவ்வாசிரியர்தம் வியாக்கியானம் லுப்தமாயிருந்ததென்றும்,மணவாளமாமுனிகள்பலருடைய பிரார்த்தனைக்கிணங்கி அக்குறையைத்தாம்நீக்கியருளினரென்றும் ஸம்ப்ரதாயம் வல்லபெரியோர்பகர்வர்.

கடல் ரத்நாகரமென்று பெயர் பெற்றிருத்தல் போல இவ்வாசிரியரது வியாக்கியானக் கடல் எண்ணிறந்த விசேஷார்த்த ரத்ன நிதியாகப் புகழ் பெற்றுள்ளதாதலால் அதனை யநுபவிப்பதே இவ்வாசார்யருடைய பெருமையநுபவமாகும்.

பெரியவாச்சான்பிள்ளையின் கம்பீரமான ஸ்ரீ ஸூக்திகள் அமுதிலுமாற்ற வினியவை இவ்வாசிரியர் அவதரியாதிருந்தால் ஸ்ரீ வைஷ்ணவ வுலகுக்குப் பேரின்பவனுபவம் மிகவும் குன்றியேயிருக்கும். இவரது திருவடிகளே தஞ்சம்.

ஸ்ரீரஸ்து

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீ மத் க்ருஷ்ண குரு ஸ்துதி

## பெரியவாச்சான் பிள்ளை ஸ்தோத்திரம்

*(ஸ்ரீ காஞ்சீ அண்ணங்கராசாரியர் விஜ்ஞாபித்தது)*

1 விஷ்வக்வ்யாபியஶ:காயவிஶேஷேண விபாஸுர: ।
ஸ்ரீக்ருஷ்ணார்யகுரு: ஸ்ரீமாந் விஜயேத ஶதம் ஸமா: (1)

(பொழிப்புரை)

எங்கும் பரந்த புகழ்த்திருமேனியுடன் விளங்காநின்ற பெரியவாச்சான் பிள்ளை பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு வாழ்க. ... ... (1)

2 நந்தநந்தந க்ருஷ்ணேதி நாமோக்திமஹமுத்ஸ்ருஜந் ।
குருதல்லஜ க்ருஷ்ணார்யேத்யுச்சைர் குஷ்யந் முதம் பஜே ॥

நந்தகோபன்குமரனை க்ருஷ்ணனுடைய திருநாமத்தைச் சொல்லுவதை தவிர்ந்து ஆசார்யசிகாமணியான ஸ்ரீ க்ருஷ்ணகுருவென்னும் பெரியவாச்சான்பிள்ளை திருநாமத்தையே பேசி மகிழ்வேன். ... ... ... (2)

3 ஜய க்ருஷ்ணகுருத்தம்ஸ! ஜயேத்யேவம் ப்ரகுஷ்யதாம் ।
ஜய ஏவ பவேந்நித்யம் ஜகத்யாம் ந பராஜய: ॥

**பெரியவாச்சான்பிள்ளைக்குப் பல்லாண்டு பாடுமவர்களுக்கு என்றும் வெற்றியேயாகும்; எங்கும் தோல்வி விளையாது. ... ... ... (3)**

4 ஆநந்தமமிதம் திவ்யமாஸாதயிதுமிச்சதாம் ।
ஆராத்யா: க்ருஷ்ணகுருராட்பதபங்கஜபாம்ஸவ: ॥

**திவ்யானந்தம் பெற விரும்புமவர்கள் பெரியவாச்சான் பிள்ளையின் திருவடித் தாமரைத் துகள்களையே ஆராதிக்கக்கடவர்கள். ... ... (4)**

5 ஸ்ரீமத்யாமுந ஸூரிஸூநுரிதி ய: ஸ்ரீக்ருஷ்ணஸூரிர் மஹாந்
ஆசார்ய: கலிஜித்குரோ: கருணயா ஸர்வஜ்ஞசூடாமணி: ।
விக்யாதோ விரராஜ, தஸ்ய ஸகல ஸ்ரீஸூக்திபாக்யாத்மநோ
வித்யாஸாகர ஸத்குரோ: ஸ்துதிக்ருதௌ அத்யாஹமுத்கண்டித: ॥

**"ஸ்ரீமத் க்ருஷ்ணஸமாஹ்வாய நமோ யாமுநஸூநவே" என்கிற தனியன்படி ஸ்ரீமத் யாமுநாசார்ய புத்ரரத்னமாகத் திருவவதரித்து நம்பிள்ளை திருவருளால் ஸர்வஜ்ஞராக விளங்கினவரும், ஆழ்வாராசார்யர்களின் ஸகல ஸ்ரீஸூக்திகளினுடையவும் பாக்யமே வடிவெடுத்தவரும் கல்விக்கடலுமான பெரியவாச்சான்பிள்ளையைத் துதிப்பதில் இன்று நான் ஆசைகொண்டெழுகின்றேன். ... ... (5)**

6 உத்கண்டா மம பூயஸீ வரவரம் யோகீச்வரம் கேவலம்
ஸ்தோதும், ஸோऽபி மஹாகுருர் நிஜஹ்ருதி ஸ்ரீக்ருஷ்ணஸூரிம் குரும் ।
ஆசார்யேஷ்வதிசப்ரபாவபரிதம் விந்யாஸ்ததந்யாத்ருஶ
ப்ரேம்ணா யத் ததஹம தமேநமதுநா ஸ்துத்வா பவேயம் க்ருதீ ॥

**ஆசார்யர்களுள் மணவாளமாமுனிகளொருவரையே துதிப்பதில்தான் அடியேன் குதூஹலமுடையேன்; ஆனால், அந்த மாமுனிகளும் தம்முடைய திருவுள்ளத்தில் பெரியவாச்சான்பிள்ளையையே விசேஷித்து ஊன்றவைத்தருளியதால் அந்த மாமுனிகளின் திருவுள்ளவுகப்புக்காக அடியேன் பெரியவாச்சான்பிள்ளையைத் துதித்து க்ருதக்ருத்யனாகக் கருதுகிறேன். ... ... ... ... (6)**

7 க்ருத்யாக்ருத்யவிவேகரிக்ததிஷணஸ் ஸோऽஹம் யதீயாநக-
ஸ்ரீஸூக்திப்ரகராந் நிஷேவ்ய நிதராம் ஹ்ருஷ்யாமி நக்தம்திவம் ।
ஸோऽயம் க்ருஷ்ணகுருத்தமோ மம கிரம் புஷ்ணாது, முஷ்ணாதுவா
மௌட்யம் மே நிருபாதிகஸ்வக்ருபயேத்யப்யர்த்தயே ஸாஞ்ஜலி ॥

க்ருத்யாக்ருத்ய விவேகசூந்யனை அடியேன் பெரியவாச்சான் பிள்ளை ஸ்ரீஸூக்திகளையே அல்லும்பகலும் சிந்தித்துக் களிக்கின்றேன். அப்பேராசிரியர் தமது பேரருளால் அடியேனுக்கு வாக்ஸம்ருத்தியைத் தந்தருளி மௌட்யத்தையும் போக்கியருளவேணுமென்று கைகூப்பிப் பிரார்த்திக்கிறேன். ... ... (7)

8 உர்வ்யாமத்ர ஜநிர் ஜுகுப்ஸிததமேத்யாஹுர் மஹாந்தோऽகிலா:
தாஸஸ்யாஸ்ய து சேதஸோ ந கலு ஸா வாக் ரோசதே வஸ்துத: ।
யஸ்மாதத்ர புவி ஸ்திதோऽப்யஹமஹோ ஸ்ரீக்ருஷ்ண ஸூரேர் குரோ:
ஸ்ரீஸூக்த்யாஹ்வயமத்விதீயமம்ருதம் ஹ்ருஷ்யாமி சூஷந் ஸதா ॥

இவ்விருள்தருமாஞாலத்தில் பிறவி வெறுக்கத்தக்கதென்று பெரியார்கள் கூறுகின்றார்களெனினும் அது அடியேனுக்கு ருசிக்கவில்லை; ஏனெனில், அடியேன் இந்நிலத்திலிருந்துகொண்டும் பெரியவாச்சான் பிள்ளை திவ்யஸூக்தியமுதத்தையே எப்போதும் பருகிக்கொண்டு ஆனந்தசாலியாயிருக்கிறேனன்றோ? (துன்பமுண்டானாலன்றோ இவ்வுலக வாழ்க்கை வெறுக்கத்தக்கதாம்) ... ... (8)

9 ஆவேஶம் ஸகலாச்ச ஸூரிகணய: காஸாரமுக்யாஸ் ததா
நாதாத்யா குரவச்ச ஸத்யமதது: ஸ்ரீக்ருஷ்ணஸூரௌ குரௌ ।
யத்வா த்ராவிடஸம்ஸ்க்ருதாகமததீ ஸௌபாக்யஸர்வஸ்வமப்-
யேவம் காமபி மூர்த்திமுத்வஹதுதைதித்யேவ நிர்த்தார்யதாம் ॥

பொய்கையார் முதலான ஆழ்வார்களனைவரும் ஸ்ரீமந் நாதமுனிகள் முதலான ஆசார்யர்களனைவரும் பெரியவாச்சான்பிள்ளை பக்கலில் ஆவேசித்தார்களென்னலாம்; அல்லது வடமொழி தென்மொழி மறைகளின் பாக்யஸர்வஸ்வமும் ஒன்று சேர்ந்து பெரியவாச்சான் பிள்ளையாக வடிவுபூண்டு உதித்தது என்று நிஷ்கர்ஷிக்கத் தட்டில்லை. ... ... ... ... ... (9)

10 ப்ரஹ்மாநந்தமஹாப்திமக்நமநஸா பாவ்யம் மயேத்யுத்ஸுகோ
யோ யோ ஹ்யத்ர ஜநஸ் ஸ ஸோऽயமகில: ஸ்ரீக்ருஷ்ணஸூரேர் கிர: ।
த்யாயம்த்யாயமமந்தநந்ததுமஹாஸிந்தௌ நிமக்நோ பவே-
தித்யேவம் கில சக்ஷதே புதவரா ஜேஜேது ஸோऽயம் குரு: ॥

ப்ரஹ்மானந்தக்கடலில் மூழ்கிக் களிக்கவேணுமென்னுமாசையுடையாரெல்லாரும் பெரியவாச்சான்பிள்ளையின் வியாக்கியான திவ்யஸூக்திகளைச் சிந்தித்து ஆனந்திக்கக் கடவர்களென்று ஸத்துக்கள் கூறுகின்றனர்; அத்தகைய பெருமை வாய்ந்த பேராசிரியர் வாழ்க. ... ... ... (10)

11 அத்யாஹம் குருவர்ய! க்ருஷ்ண! பவத: ஸ்தோத்ரே ப்ரவ்ருத்தோ முதா
சிந்தாலேஶவிவர்ஜிதஸ் ஸரபஸம் பத்யாநி விஜ்ஞாபயே ।
ஸ்தோத்ரம் யத்யபி பூர்த்திமேஷ்யதி, பவந்மாஹாத்ம்யதுக்தோததௌ
த்வித்ரா ஏவ ஹி ஶீகரா: பரிசிதா: ஸ்யுஸ் தாவதா கிம் பவேத் ॥

**ஸ்வாமிந்! இன்று அடியேன் தேவரீரைத் துதிக்க விழிந்து சிறிதும் ஆலோசனையின்றிக்கே சுலோகங்களை விரைவாகவே விண்ணப்பம் செய்துவிடுகிறேனாகையால் இந்த ஸ்தோத்ரநூல் சடக்கென முடிந்துவிடும். ஆனாலும் தேவரீருடைய பெருமைக்கடலில் சில திவலைகளே அநுபவிக்கப்பட்டனவாகும். அதனால் யாருக்கு என்ன த்ருப்தியாகும்? ... ... ... (11)**

12 வ்யாக்க்யா ஹ்ருத்யதமா தவைவ விலஸத்யந்யஸ்ய கஸ்யாபி நே-
த்யாத்மீயாநுபவைகஸாக்ஷிகமிதம் ஸர்வே புதாஶ் சக்ஷதே ।
ஸ்வாமிந்! க்ருஷ்ணகுரோ! பவத்விரசிதவ்யாக்க்யாநரத்நாகரே
ஸம்ம்ருஷ்டே ஸதி ஸத்யமுக்தமிதமித்யுத்கோஷணம் யுஜ்யதே ॥

**பெரியவாச்சான்பிள்ளையாசிரியரே! தேவரீருடைய வியாக்கியானங்களே பரம போக்யங்களென்று ஸகல விவேகிகளும் தம்தம் அநுபவத்தைக்கொண்டு கூறுகிறார்கள். உண்மையில் தேவரீருடைய வியாக்கியானக்கடலில் ஆழ்ந்து ஆராயுமளவில் இது ஸத்யமேயென்று பறைசாற்றத் தட்டில்லை. ... ... (12)**

13 நந்தா நந்தபகாரவிந்தயுகலே ச்ரேயோ பஜேத் வா ந வே-
த்யேவம் ஸம்சய ஏவ் காம்முக்யாச் சாஸ்தி ஸாஸ்த்ரஸ்திதி: ।
நந்த்ருணும் கில க்ருஷ்ணஸூரிபதயோ: ச்ரேயாம்ஸி ஸர்வாண்யபி
ப்ராதுஷ்ஷ்யுர் விஸய்ர்வகா ஸவித்ரார் நிஸ்சப்ரசம் குஷ்யதே ॥

**"ஸித்திர் பவதி வா நேதி ஸம்சயோச்யுத ஸேவிநாம்" என்று, பகவானைப்பற்றினவர்களுக்குப் பேற்றில் ஸந்தேஹமேயுள்ளதாக சாஸ்த்ரம் முறையிடுகின்றது; அங்ஙனன்றிக்கே பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளைப்பற்றினார்க்கு ஸகலச்ரேயஸ்ஸுக்களும் மல்குமென்பது ஐயமற அறுதியிடப்பட்ட விஷயம். . ... ... (13)**

14 குத்ராஸ்தே குருரேஷ க்ருஷ்ண இதி யே ப்ருச்சந்தி தேப்யோ ப்ருவே
ஸ்வாநுத்யாந பராங்குசஹ்ருதோ திவ்யேஷு தேசேஷ்வத ।
ஸ்ரீமத்த்ராவிடதிவ்யஸூக்தி நிநதோத்தாந ஸ்தலீஷ்வல்லஸேத்
இத்யாஹு:. மம மாநஸே பரமஸௌ தைஸ் ஸாகமாஸ்தே த்ருவம் ॥

**பெரியவாச்சான்பிள்ளை எங்கு எழுந்தருளியுள்ளாரென்று கேட்டால், தம்மைச் சிந்திப்பார் சிந்தையினுள்ளும், கோயில் திருமலை பெருமாள் கோயில் முதலான திருப்பதிகளிலும், திருவாய்மொழியின் இன்னிசைமன்னுமிடங்களிலும் எழுந்தருளியிருப்பதாகப் பலரும் கூறுவர்; அடியேன் விண்ணப்பஞ்செய்வது அங்ஙனன்று: அவையெல்லாவற்றோடுங்கூட என்னுள்ளத்துள்ளே உறைகின்றாரென்பதே உண்மை**

15 ஆசார்யோத்தம! விக்வத்துக்சம! மஹாயோகீந்த்ர! ஸர்வஜ்ஞ போ:!
ஸ்ரீராமாநுஜ திவ்யதர்சநஸமுத்தாரைக பக்தாதர! ।
ஸ்ரீமத்க்ருஷ்ணகுருத்தமேதி ஸத்தம் ஸங்கீர்த்தயந்த்யத்ர யே
தேஷாமேவ ஹி தந்யதா நிருபமா ஜாகர்த்தி பூமண்டலே ॥

**ஆசார்யர்களில் தலைவரென்றும், வித்வான்களில் சிறந்தவரென்றும், யோகிகளில் தலைவரென்றும், ஸர்வஜ்ஞரென்றும் எம்பெருமானார் தரிசனத்தை யுத்தரிப்பிக்கத் தோன்றியவரென்றும், ஆகவிப்படி பெரியவாச்சான்பிள்ளையைக் குறித்து குணகீர்த்தனம் பண்ணவல்லவர் யாவரோ அவர்களே இவ்வுலகில் ஒப்பற்ற தந்யராவர்.**

16 தக்ஷாஸ் ஸந்தி ப்ரபந்தா புதவரா த்வித்ரக்ஷணைப்யந்தரே
நிர்மாதும் பஹுபந்தப்ருந்தபரிதா பஹ்வீ:க்ருதீரஸ்து தத் ।
ஸ்ரீமத் க்ருஷ்ணகுருத்தமஸ்ய பணிதிஷ்வேகாக்ஷரஸ்யாக்ரத:
நைவ ஸ்தாதுமலம் ஸமஸ்தக்ருதயஸ் ஸம்பூய பவந்த்யோऽபி தா: ॥

**ஆச்சரியமான பந்தங்களுடன்கூடின பல கவிதைகளைக் கணப்பொழுதில் இயற்ற வல்ல வித்வான்கள் இவ்வுலகிற் பலருளர்; அதுகிடக்கட்டும். அவற்றால் என்ன பயன்? அவையெல்லாம் ஒன்றுகூடினாலும் பெரியவாச்சான்பிள்ளையின் அமுத மென்மொழிகளில் ஓரக்ஷரத்திற்கு இணையாகாவென்பது ஸத்யம். ... (16)**

17 இந்தே ஸந்ததமஸ்மதீய ஹ்ருதயே ஸ்ரீக்ருஷ்ணஸூரிர் குரு:
வந்தே தத்பதபத்மயுக்மமநிசம் மந்தேதராநந்தபாக் ।
ஸந்தோஹம் பரிபுஜ்ய தஸ்ய மதுரோக்தீநாம் ஸுத்ருப்தோऽஸ்ம்யஹோ
ஸந்தேஹ: க இஹாஸ்தி கோபி ந மயா துல்யோऽத்ர பூமாவிதி ॥

பெரியவாச்சான்பிள்ளை எப்போதும் என்னுள்ளத்துள்ளே திகழ்கின்றார்; அவருடைய திருவடித்தாமரையிணையையே எப்போதும் வணங்கி மகிழ்கின்றேன். அவருடைய இனிய திவ்யஸூக்திகளையே ஸதா அநுபவித்துக் களிக்கின்றேன்; இப்படிப் பட்டவெனக்கு இந்நிலத்தில் ஆரும் நிகரில்லையென்பதில் என்ன ஸந்தேஹம்? (17)

18 ய: ஸ்ரீமத்கலிவைரிஸூரிக்ருபயா ஸம்ப்ராப ஸார்வஜ்ஞதாம்
யம் ப்ராஹூ ரஸிகாக்ரகண்யமதுலம் யேந க்ஷிதிர் த்யௌரபூத் ।
யஸ்மா ஏவ நதிம் ஸதா விததே ப்ராமாணிகா ஆஸ்திகா:
யஸ்மாதத்புததிவ்யஸூக்திநிகரா: ப்ராதுர்பபூவு: க்ஷிதௌ ॥

19 யஸ்ய ஸ்வாதுவசஸ்ததிஷ்வநுபமா ப்ராமாணிகத்வப்ரதா
யஸ்மிந்நார்ஜவமத்விதீயமமிதம் விப்ராஜதே விச்ருதம் ।
ஸோऽயம் க்ருஷ்ணகுருத்தமோ குணநிதிர் வித்யாநிஷத்யாத்மக:
பக்திம் வர்த்தயதே மமைவ ஹ்ருதயே விந்தந் விசிஷ்ய ஸ்திதிம் ॥

(இவ்விரண்டு ச்லோகங்களிலும் வரிசையாக ஏழு வேற்றுமைகளும் அமைக்கப்பட்டிருக்கின்றன.) யாவரொருவர் நம்பிள்ளை திருவருளால் ஸர்வஜ்ஞரானரோ, எவரை ரஸிகர்களுள் தலைவராகக் கூறுகின்றார்களோ, எவரால் லீலாவிபூதியே நித்யவிபூதியாயிற்றோ, எவர்பொருட்டு ப்ராமாணிகர்களான ஆஸ்திகர்கள் யாவரும் வணங்கிப் போருகின்றார்களோ, எவரிடத்தில்நின்று ஆச்சரியமான திவ்ய ஸ்ரீஸூக்திகள் தோன்றினவோ, எவருடைய பரமபோக்ய ஸ்ரீஸூக்திகளில் ப்ராமாண்யப்ரஸித்தி நிகரற்று விளங்குகின்றதோ, எவரிடத்தில் ருஜுபுத்தி அளவு கடந்து விளங்கி வீறுபெற்றிருக்கின்றதோ, இப்படிப்பட்ட பெருமைவாய்ந்து, குணநிதியாயும் கல்விக்கடலாயும் விளங்காநின்ற பெரியவாச்சான்பிள்ளை விசேஷித்து அடியேனுள்ளத்திலேயே வீற்றிருந்து தம்மிடத்தில் பக்தியை வளர்த்தருளாநின்றார். ... ... ... ... (18, 19)

20 ஸ்ரீமத்வேங்கடநாதஸூரிரஹஹ! ஸ்வாமிந் த்வதீயாநக-
வ்யாக்யாஸூக்திததீரஜஸ்ரமம்ருதப்ராயா: பிபந் ஹர்ஷபாக் ।
ஹர்ஷம் தம் நிஜதிவ்யஸூக்திததிஷு ப்ராசீகசத் பூரிச:
ஜாநந்தோऽபி புதா இதம் கதிபயே நிந்தந்தி தௌர்ப்பாக்யத: ॥

ஸ்வாமிந்! வேதாந்தவாசிரியரும் தேவரீருடைய அமுதமன்ன வியாக்கியான திவ்ய ஸூக்திகளை ஸேவித்துப் பரமானந்தமடைந்து அந்த ஆநந்தத்தைத் தமது திருவாக்குக்களில் விசேஷமாக வெளியிட்டருளியிருக்கிறாரென்பதைச் சில பண்டிதர்கள் அறிந்துவைத்தும்தௌர்ப்பாக்யத்தினால்தேவரீரிடத்தில்அபசாரப்பட்டொழிகிறார்.

21 ஸ்ரீமத்யாமுநயோகிபுங்கவக்ருத ஸ்தோத்ரஸ்ய பாஷ்யம் விகந்
வேதாந்தார்யகுருத்தமோ குருவர ஸ்ரீக்ருஷ்ணஸூரே! தவ ।
வ்யாக்யாமேவ புந:புநச்ச விம்ருசந் தத்ஸாரவாக்கும்பநை:
ஸாநந்தம் விலிலேக ஸாது ததிதம் மத்யஸ்தமாந்யம் வச: ॥

ஆசார்யசிகாமணியான பெரியவாச்சான்பிள்ளையே! ஆளவந்தாரருளிச்செய்த ஸ்தோத்ரரத்னத்திற்கு பாஷ்யமருளிச்செய்யாநின்ற வேதாந்தவாசிரியர் தேவரீருடைய வியாக்கியானத்தையே அடிக்கடிஆராய்ந்தருளி அதிலுள்ள ஸாரமான வாக்

குக்களையெல்லாம் திரட்டி மிக ஆனந்தத்துடன் அந்த பாஷ்யத்தை யெழுதித் தலைக்கட்டினார் என்கிறவிது மத்யஸ்தமநீஷிகள் கொண்டாடத்தக்க வார்த்தை.

22 ரத்நாவல்யபிதாம் க்ருதிம் ச ரசயந் வேதாந்தஸூரிர் மஹாந்
ஸ்ரீமத் க்ருஷ்ணகுரோ! தவைவ சதுராம் வ்யாக்க்யாம் மஹாநந்ததாம் ।
ஸம்ஸேவ்ய ப்ரதயந் ததர்த்தநிசராந் கீர்த்யா மஹத்யா பபௌ
தத்பக்தாஸ் ததிதம் விதந்தி ச ததாப்யந்யாத்ருஸ ஸ்த்வாக்ரஹ: ॥

ஸ்வாமிந் பெரியவாச்சான்பிள்ளையே! த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவலியருளிச்செய்யாநின்ற ஸ்ரீதேசிகர், தேவரீருடைய பரமபோக்யமான இருபத்து நாலாயிரப்படி வியாக்கியானத்தையே ஸேவித்து அதிலுள்ள தீவ்யார்த்தங்களையே வெளியிட்டு அதனால் மிகச்சிறந்த புகழ்படைத்து விளங்கினார். அவ்வாசிரியரைச் சேர்ந்தவர்கள் இவ்வுண்மையை அறிந்துவைத்தும் ஆச்சரியமான பிடிவாதங் கொண்டிருக்கிறார்களந்தோ! ... ... ... (22)

23 ஸத்யம் கிஞ்சந வச்மி, க்ருஷ்ணகுருராட் வ்யாக்க்யாநமித்யேவ யே
ச்ருண்வந்தி த்ருவமஞ்ஜஸா ஹ்ருதி முதம் விந்தந்தி தே நிஸ்துலாம் ।
தத்தாத்ருங்மஹிமாட்ய திவ்யபணிதீ: கேசிஜ்ஜநா மத்ஸராத்
நிந்தேயுர் யதி தாவதா க்ஷதிரஹோ கா நாம? நச்யந்து தே ॥

ஒருண்மையை விஜ்ஞாபிக்கிறேன்; 'பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானம்' என்று இவ்வளவுமாத்திரமே யார் கேள்விப்படுகிறார்களோ அவர்கள் யாராகவுமாம், கேட்டவுடனே பரமானந்தமடைகின்றார்கள். அப்படிப்பட்ட பெருமைபொலிந்த திருவாக்குக்களைச் சில யதாஜாதர் மாத்சரியத்தினால் தூஷிக்கிறார்களென்றால் அதனால் யார்க்கு என்ன ஹானி? தொலையட்டுமவர்கள். ... ... (23)

24 ஆசார்யோத்தம! ஸிம்ஹமாஸி மஹிதே ரோஹிண்யபிக்யோடுநி
ப்ராதுர்ப்பூத! யதீந்த்ரதர்சநஸமுத்தாரைக பத்தாதர! ।
யுஷ்மத்வைபவவர்ணநோத்ஸுகமஹாபக்தௌகமத்யே ஸதா
வர்த்தேய ப்ரதயேய தே க்ருதிததீ: ஏவம் தயேதா மயி ॥

ஆவணிமாதம் ரோஹிணி நன்னாளில் அவதரித்தருளி எம்பெருமானார் தரிசனத்தை உத்தரிப்பித்த ஆசார்யசிகாமணியே! தேவரீருடைய பெருமைகளைப் பேசும் மெய்யடியார்களின் குழுவிலேயே எஞ்ஞான்றும் வர்த்திக்கக்கடவேன். தேவரீருடைய திவ்யக்ரந்தங்களையே பிரசுரம் செய்துகொண்டிருக்கக்கடவேன். அடியேன்மீது இங்ஙனே அருள்புரியவேணும். ... ... ... (24)

ஸ்வாமிந்! க்ருஷ்ணகுரோ! பவத்பதயுகே மா நாம பூத் ப்ரேம மே
த்வத்பக்தப்ரியபக்தபக்தசரணப்ரேமைவ பூயாந் மம ।
தந்யாஸ் தே கலு பக்தபக்தகணநா ஸீம்நி ஸ்திதா இத்யமும்
தத்த்வார்த்தம் விதா மயா விரசிதம் யுக்தம் ஹ்யத: ப்ரார்த்தநம் ॥

ஸ்வாமிந் பெரியவாச்சான்பிள்ளையே! அடியேனுக்கு தேவரீருடைய திருவடியிணையில் அன்பு உண்டாகவே வேண்டாம்; தேவரீருடைய தொண்டர் தொண்டர் தொண்டர் தொண்டர் திருவடிகளிலேயே அன்பு உண்டாயிடுக. பக்தர்களின் அடிமையில் எல்லைநிலத்தில் நிற்பவர்களே சீரியர் என்று அடியேன் அறிந்திருப்பதனால் இங்ஙனே பிரார்த்திப்பது உரியதுதானே. ... ... *

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

# ஸ்ரீ ராமாயண விமர்சப் பகுதி

ஸ்ரீராமாயண அயோத்யா காண்டத்தில் தசரத சக்ரவர்த்தி இராமபிரானுக்கு யுவராஜ பட்டாபிஷேகம் செய்ய மனங்கொண்டு மஹாஸபை கூட்டி அனைவருடையவும் ஸம்மதியை ஏகமுகமாகப்பெற்று, இராமபிரானையழைத்துத் தன்னுடைய மனோரதத்தை வெளியிட்டபோது பரதாழ்வானைப்பற்றிச் சில வார்த்தைகள் சொல்லியிருக்கிறான். அப்போது பரதாழ்வான் ஶத்ருக்நாழ்வானோடுகூட மாதுலக்ருஹம் சென்றிருக்கிறானென்பது தெரிந்த விஷயம். பரதன் இராமபிரானிடத்தில் பரம பக்தி பூண்டவனென்பதைத் தசரத சக்ரவர்த்தி நன்கறிந்தவனேயொழிய அறியாதவனல்லன். அப்படியிருந்தும், பரதாழ்வான் அயோத்திமாநகர் திரும்பிவருவதற்குள்ளே ஸ்ரீராமபட்டாபிஷேகத்தைத் தலைக்கட்டிவிடவேணுமென்கிற எண்ணம் சக்ரவர்த்தியினுள்ளத்தில் தோன்றியுள்ளது. எதனால் அந்த எண்ணம் தோன்றிற்று? என்பதைப்பற்றி நாம் விசாரம் செய்யப்புகவில்லை. அந்த எண்ணத்தை மன்னவன் இராமபிரானிடத்தில் வெட்ட வெளிச்சமாகத் தெரிவித்துமிருக்கிறான். அங்ஙனம் தெரிவிக்கும்போது இராமபிரான் என்ன பதில் சொல்லியிருக்கவேண்டும்? "அப்பா! இந்த சுபகாரியத்திற்கு நம் பரதசத்ருக்னர்களும் உடனிருந்து உகந்து நடப்பிக்க வேண்டியது அவசியமல்லவா? ஆதலால் உடனே அவர்களுக்கும் செய்தியறிவித்துச் சடக்கென இவ்விடம் வரவழைத்துப் பிறகு முஹூர்த்த ஸம்விதானம் பண்ணும்; அவர்களில்லாமல் இந்தச் சடங்கை நடத்துவது உசிதமன்று" என்றன்றோ சொல்லியிருக்கவேண்டும். சக்ரவர்த்தி சொன்னதை இராமபிரான் சிறிதும் மறுக்காமையினால் "அப்ரதிஷித்தம் அநுமதம் பவதி" என்னும் நியாயத்தினால் பரதாழ்வானுடைய மனவேறுபாட்டை இராமபிரான் அங்கீகரித்ததாகவன்றோ ஏற்படுகிறது!

அன்றியும், சித்திரகூடத்திற்குவந்த பரதாழ்வானை நோக்கிப் பெருமாள் வார்த்தை சொல்லுகையில் "புரா ப்ராதா: பிதா ந: ஸ மாதரம் தே ஸமுத்வஹந், மாதாமஹே ஸமாச்ரௌஷீத் ராஜ்யசுல்கமநுத்தமம்" என்று பழங்கதை சொல்லுகிறார் (பெருமாள்); தசரத சக்ரவர்த்தி கைகேயியை மணம் புணரவேண்டிச் சென்றபோது கேகயமன்னவனிடம் 'கைகேயி வயிற்றில் பிறக்கும் மகனுக்கே ராஜ்யம்கொடுப்பதாகப் பிரதிஜ்ஞை பண்ணியிருக்கிறார் — என்று. இந்த ஸமாசாரம் பெருமாளுக்கு அயோத்தியிலேயே தெரிந்திருக்கவேணுமேயல்லது வனம்புக்கபின்பு தெரிந்திருக்க ப்ரஸக்தியில்லை. சக்ரவர்த்தி அபிஷேகப்ரஸ்தாவம் பண்ணினபோதே இதைப் பெருமாள் அவற்கு நினைவூட்டி "அப்பா! பரதனுக்குப் பண்ணவேண்டியிருக்க, அவனைவிட்டு எனக்குப் பண்ண நினைப்பது உசிதமன்றே' என்று முந்துறமுன்னம் கூறியிருக்க வேண்டும். அங்ஙனம் கூறாதது இராமபிரானுடைய அநார்ஜவத்தைத் தெரிவிக்கின்றதன்றோ? என்றிப்படிச் சில ஶங்கைகள் தோன்ற இடமுண்டாகியிருக்கின்றது. தவிரவும், கைகேயி தன்னுடைய விவாஹ காலத்தில் சக்ரவர்த்தி ப்ரதிஜ்ஞை பண்ணிக்கொடுத்திருப்பதைக்கொண்டு பரதனுக்கே ராஜ்யாபிஷேகம் செய்யவேணு

மென்று நிர்ப்பந்திக்க ப்ராப்தியிருக்க, இதைவிட்டு சம்பராஸுர யுத்தகாலத்தில் அநிர்ணீதமாகக் கொடுத்த வரப்ரதானத்தை முன்னிட்டு மன்றுடினது எதற்காக? என்கிற கேள்வியும் தோன்ற நின்றது. இவற்றுக்கெல்லாம் அடைவே விடையளிக்கின்றோம்.

மாதுலக்ருஹத்திலிருந்து பரதாழ்வானை வரவழைத்திட்டால் பரதன் தனக்கு மகுடாபிஷேகத்தை இசையவேமாட்டான். இராமன் தானுசைப்பட்டிருக்கிற வநவாஸ மஹானந்தத்தைப் பெறவும்மாட்டான். பரதனுக்கு மகுடாபிஷேகமாகவேணு மென்று கைகேயி தான் ஆசைப்பட்டாளேயொழிய அது பரதாழவானுக்கு ஈஷத்தும் அபிமதமன்றே *ந மந்தராயா ந ச மாதுரஸ்யா தோஷோ ந ராஜ்ஞோ ந ச ராகவஸ்ய, மத்பாபமேவாத்ர நிமித்தமாஸீத் வநப்ரவேஶே ரகுநந்தநஸ்ய* என்றும், *ஹந்யாமஹமிமாம் பாபாம் கைகேயீம் துஷ்டசாரிணீம்* என்றும் சொல்லி, *விலலாப ஸபாமத்யே ஜகர்ஹே ச புரோஹிதம், ராஜ்யஞ்சாஹஞ்ச ராமஸ்ய தர்மம் வக்துமிஹார்ஹஸி* என்று புரோஹிதரான வஸிஷ்டரை ஶர்ஹித்தும் போந்த பரதாழ்வான் தான் மகுடம்புனைய இசைவானென்பது ஸர்வாத்மநா அஸம்பாவிதமன்றே. ஆகவே தசரதமன்னவன் பாரித்தபடி ஸ்ரீராம பட்டாபிஷேகமே இடையூறின்றி நடைபெற்றிருக்கும். அவதாரப்ரயோஜநம் நிறைவேற வழியிராது கைகேயியானவள் தனது விவாஹகாலத்தில் சக்ரவர்த்தி ப்ரதிஜ்ஞைசெய்து கொடுத்திருந்ததை நினைவூட்டி பரதனுக்கு ராஜ்யம் கேட்டிருந்தாளாகில் அயோத்யா ராஜ்யமே கிடைக்குமென்கிற நிச்சயமில்லை; பலபல ராஜ்யங்களுக்கு அதிபதியான மன்னவன் ஏதேனுமொரு ராஜ்யத்தைக் கொடுத்துவிடவுங்கூடும். அயோத்யா ராஜ்யமே கிடைப்பதாக வைத்துக்கொண்டாலும், இராமபிரானும் அயோத்தியா நகரில் வாழ்ந்துகொண்டிருந்தானாகில் *குணநாம் ஆகரோ மஹாந்* என்று புகழ்பெற்ற அவன் பக்கலில் ப்ரஜைகள் அன்பும் ஆதரவும் கொண்டிருப்பர்களேயல்லது தன் மகன் ராஜ்யாதிபதியாயிருந்தும் அவனுக்கு மேன்மை யொன்றுமில்லாமற் போய்விடும்; பரதனுங்கூட இராமனையே வழிபட்டு வாழ்பவனாயிருந்துவிடுவன். ஆகவே இராமனை நாட்டிலிருக்கவொட்டாதபடி செய்யவேண்டுவது கைகேயிக்கு முக்கியம். அதற்காக சம்பராஸுர யுத்தகாலத்தில் மன்னவன் வாக்தானம் செய்திருக்கிற இரண்டு வரங்களை முன்னிடவேண்டியது அவளுக்கு அவசியமாயிற்று... இங்ஙனே ஸமாதானங்கள் கண்டுகொள்வது. ... ...

## ஸுபாஷிதப் பகுதி

ராமே ராஜ்யம் பிதுரபிமதம் ஸம்மதஞ்ச ப்ரஜாநாம்
மாதா வவ்ரே கதிஹ பரதே ஸத்யவாதீ ததௌ ச,
சிந்தாதீதஸ் ஸமஜநி ததா பாதுகாக்ர்யாபிஷேக:
துர்விஜ்ஞாநஸ்வஹ்நுதயமஹோ தைவமத்ர ப்ரமாணம்.

[பாதுகாஸஹஸ்ரே—ஸுபாஷிதபத்ததௌ]

"நாமொன்று நினைக்க தெய்வமொன்று நடத்துகிறது" என்பது லோகவசனம். *அந்யோ ஹி அந்யச் சிந்தயதி ஸ்வச்சந்தம் விததாம்யஹம்* என்பது பகவத் வசனம். இவையிரண்டும் ஸ்ரீராமாயணக் கதையொன்றிலே மூதலிக்கப்படுகின்றன.

[ராமே ராஜ்யம் பிது: அபிமதம்] இராமபிரானுக்கு முடிசூட்டவேணுமென்பது சக்ரவர்த்தியின் பாரிப்பு. [ஸம்மதஞ்ச ப்ரஜாநாம்] *இச்சாமோ ஹி மஹாபாஹும் ரகுவீரம் மஹாபலம், கஜேந மஹதா யாந்தம் ராமம் ச்சத்ராவ்ருதாநநம்* என்று நாட்டடங்கப் பாரித்தபடியினால் இந்த ராமபட்டாபிஷேகம் ஸகல ப்ரஜைகளுக்கும் ஸம்மதமாயுமிருந்தது. [மாதா தத் பரதே வவ்ரே] திடீரென்று கைகேயி வந்து என் மகனான பரதனுக்கே இந்த ராஜ்யாபிஷேகத்தைச் செய்யவேணுமென்று கோரினாள். [ஸத்யவாதீ த்தௌ ச] ஸத்யவாதியான சக்ரவர்த்தி அப்படியே யாகுகவென்று இசைந்தாயிற்று. ஆக, ஸகல பௌரஜனங்களினுடையவும் சக்ரவர்த்தியினுடையவும் விருப்பத்தின்படி ஸ்ரீராம பட்டாபிஷேகமாவது நடைபெறவேணும்; கைகேயி விரும்பி சக்ரவர்த்தியும் இசைந்தபடி பரதாபிஷேகமாவது நடைபெறவேணும். இரண்டும் நடக்கவில்லை. [சிந்தாதீத: ஸமஜநி ததா பாதுகார்பாபிஷேக:] ஒருவரும் சிந்தியாத பாதுகாபட்டாபிஷேகமென்று ஒன்று திடீரென்று நடைபெற்றது. இதனால் என்ன தெரியவருகிறதென்றால்; [துர்விஜ்ஞாந ஸ்வஹ்ருதயம் அஹோ! தைவமத்ர ப்ரமாணம்] இத்தகைத்தென்று ஒருவராலும் அறுதியிட வொண்ணாததான பகவத் ஸங்கல்பமே பலீயஸ்ஸென்று தெரிகின்றதென்கை. இதில் நான்காவது பாதத்தில் 'துர்விஜ்ஞேய' என்று சிலர் திருத்தும் பாடம் வியாகரணத்திற்குச் சேராது. (துர்விஜ்ஞாந) என்பதே பொருந்தும். துர்க்கடவ்ருத்தி யென்னும் நூலில் (துர்விஜ்ஞேய) என்னும் பிரயோகமும் ஒருவாறு ஸமர்த்திக்கப்பட்டிருந்தாலும் அது க்லிஷ்டகதியேயாகும். ... ... *

# விநோதகதைப் பகுதி

ஒரு வித்வான் தம்முடைய பரமஸுந்தரியான மகளுக்கு வரன் தேடிக்கொண்டிருந்தார். அவரும் அவருடைய குமாரர்களும் இப்பெண்ணும் ஆக எல்லாரும் நன்கு ஸம்ஸ்க்ருதம் படித்தவர்களாதலால் நன்றாகப் படித்த வரன் வேணுமென்று தேடிக்கொண்டிருந்தார். ஒருவர் தம்முடைய குமாரனுக்கு நல்ல படிப்பு இருப்பதாகப் பொய்சொல்லி வஞ்சித்து விவாஹத்தை முடித்துக்கொண்டார், அந்த மணவாளப்பிள்ளை சிலகாலம் பாடசாலைக்குப் போய் வந்துகொண்டிருந்ததனால் மெய்யே படிப்பாளியென்று மாமனார் முதலானவர்களும் ப்ரமித்திருந்தார்கள். விவாஹமோ முடிந்துவிட்டது.

இப்படியிருக்கையில், ஸரஸ்வதீ பூஜையன்று முதல்நாள் ஜாமாதாவை மாமனார் தம் இல்லம் வரும்படி அழைத்தார். ஜாமாதாவும் தன் தகப்பனாரிடம் உத்தரவு பெற்றுக்கொள்ளச் சென்றான். அப்போது தகப்பனார் 'பயலே! உனக்கோ படிப்பு ஒன்றும் பலிக்கவில்லை; உன்னை மஹாபண்டிதனாக நான் பொய்சொல்லி ஏதோ விவாஹத்தை முடித்துவைத்தேன்; உன் சாயம் வெளிப்படுவதற்கு இன்று ஸந்தர்ப்பம் வந்துவிட்டதே! வேறுபண்டிகை நாள்களாக இருந்தால் பாதகமில்லை; இப்போது ஸரஸ்வதீபூஜைக்காக உன்னை யழைக்கிறார்கள். அவர்களெல்லாரும் பெரிய பண்டிதர்களாகையால் அவர்களில்லத்தில் பலபல புஸ்தகங்களுண்டு; அவற்றையெல்லாம் உன் மாமனாரும் மைத்துனன்மார்களும் எடுத்துப் பரிஷ்காரப்படுத்துவர்கள்; அந்த ஸமயத்தில் நீ அவர்களெதிரில் ஊமைபோல் உட்கார்ந்

திருக்க வேண்டியதாகும்; உன்னுடைய சாயம் வெளிப்படுவதோடு நில்லாமல் என்னுடைய பொய்மையையும் வெளியாகிவிடுமே யென்று அஞ்சுகிறேன்' என்றார். அதற்கு அவன் ஒன்றும் பதில் சொல்லமாட்டாமல் தலைகுனிந்து நின்றான்.

அப்போது தகப்பனார் 'பயலே! நான் ஒரு உபாயம் சொல்லித்தருகிறேன்; நாளை காலை அவசியம் வருவதாக அவர்களுக்கு நீ பதில் சொல்லி யனுப்பிவிடு; இன்றிரவு முழுவதும் ஸம்ஸ்க்ருதத்தில் நாலிரண்டு வார்த்தை உனக்கு உருப்படி நெட்டுருப்போட்டு வைக்கிறேன். அதை நீ நாளைக்கு அங்கு உபயோகப்படுத்தினால் ஒருவாறு மானத்தோடு திரும்பி வரலாம்?' என்றார். குமாரன் அப்படியே இசைந்தான். தகப்பனார் அன்றிரவு முழுவதும் மகனுக்குப் பாடம் பண்ணிவைத்தது என்னவென்றால்; உன் மாமனார் ஏதாவது ஒரு பெரிய புஸ்தகம் எடுத்தாரானால் அப்போது நீ 'கிம் இதம் புஸ்தகம்' என்று கேள்; அவர் இன்ன புஸ்தகமென்று பதில் சொல்லுவர்; அப்போது நீ ''இதம் மயா படிதம்'' என்று சொல்லு. மறுபடியும் அவர் வேறொரு பெரிய புஸ்தகமெடுக்கும்போது 'கோயம் ஸ்ரீகோச:' என்று கேள்; அவர் பதில் சொன்னவுடனே 'ஏததபி மயா படிதம்' என்றுசொல்லு. என்றிப்படிச் சில வார்த்தைகளை வெகு சிரமப்பட்டுக் கற்பித்து வைத்தார். அவற்றை அப்படியே உபஸ்திதி செய்துகொண்டு மறுநாள் காலை மாப்பிள்ளை மாமனாரகத்திற்குச் சென்று சேர்ந்தாயிற்று. இரவெல்லாம் நெட்டுருப்போட்ட ஸம்ஸ்க்ருத வார்த்தைகளை உபயோகப்படுத்தும் ஸமயமும் வாய்த்துவிட்டது.

ஸரஸ்வதிபூஜைக்கு ஆரம்பித்த மாமனார் ஒரு பெரிய ஓலைச்சுவடியை அவிழ்த்தார். கிமிதம் புஸ்தகம் (இது என்ன புஸ்தகம்?) என்று ஜாமாதா கேட்டார். அதற்கு மாமனார் 'அயம் தசோபநிஷத் பாஷ்ய ஸ்ரீகோச:' என்றார். உடனே மாப்பிள்ளை 'இதம் மயா படிதம்' (இது நான் வாசித்திருக்கிறேன்) என்றான். அதுகேட்டு எல்லோரும் ஸந்தோஷித்தார்கள். மாமனார் மறுபடியும் ஒரு பெரிய புஸ்தகம் அவிழ்த்தார். 'கோயம் ஸ்ரீகோச:' என்றான் ஜாமாதா. 'சாபர பாஷ்ய மிதம்' என்றார் மாமனார். ''ஏததபி மயா அதீதம்'' (இதுவும் நான் வாசித்திருக்கிறேன்) என்றான் ஜாமாதா. அது கேட்டும் எல்லாரும் மஹாநந்தமடைந்தார்கள். மறுபடியும் ஒரு ஸ்ரீகோசத்தை அவிழ்க்கும்போதும் இதமபி மயா படிதமென்றான். மாமனார் வேறொரு பெரிய புஸ்தகம் அவிழ்த்தார். அஃது என்னவென்றால், இனிமேல் எழுதுவதற்காக ஏடுகளைச் சேமித்து வைத்திருக்கிற எழுதாத புஸ்தகம். 'கோயம் ஸ்ரீகோச:' என்றார் ஜாமாதா. 'அலேகக்ரந்த:' (எழுதாத ஏடு) என்றார் மாமனார். 'இதமபி மயா படிதம்' (இதுவும் நான் வாசித்திருக்கிறேன்) என்றார் ஜாமாதா. அது கேட்டவுடனே அவர்களுக்கு துக்கம் தாங்க முடியாததாயிற்று. இந்த ஜாமாதாவின் மனைவியும் நன்றாகப் படித்தவளாகையாலே இப்படிப்பட்ட உலக்கைக்கொழுந்து புத்திசாலியான பர்த்தா நமக்கு வாய்த்தானே! என்று மிக்க வருத்தம் பொறுக்ககில்லாமல் 'அடா முஸலகிஸலயமே!' என்று சொல்லி அவன் தலையில் ஒரு குட்டு குட்டிச் சென்றாளாம்; அவன் அந்த அவமானம் பொறுக்கமாட்டாமல் உடனே எழுந்து வெளியேறிக் காசிக்குச் சென்று வெகு ஆஸ்தையுடன் வாசித்து சதுர்சாஸ்த்ர பண்டிதனாகி மீண்டுவந்து முஸலகிஸலயம் என்கிற ஒரு க்ரந்தத்தை இயற்றினானாம். இந்த க்ரந்தம் இப்போதும் கிடைக்கிறதென்கிறார்கள்.

# இரு பெரியார்களின் பரமபதப்ராப்தி

1 ஸ்ரீமதுபயவே. வித்வான். அ. மு. ஸ்ரீநிவாஸாசாரியர் ஸ்வாமி சென்ற மாதத்தில் திருமழிசையில் திருநாடலங்கரித்தார். இந்த ஸ்வாமி ஸ்ரீபெரும்பூதூர் கலாசாலையில் ஸம்ஸ்க்ருதஸாஹித்ய வியாகரண வேதாந்தங்கள் அதிகரித்தவர். கவிதாஸாமர்த்தியமுமுடையவர். சிறந்த ரஸிகர். (வைகுண்டவாஸி) திருவல்லிக்கேணியில் வாழ்ந்த கவிபூஷண அத்தங்கி குமாரதாதாசாரியர் ஸ்வாமிக்குப் பலவாண்டுகள் 'சக்ஷிர்மே பாஹு:' என்னும்படியிருந்தவர். நமது க்ரந்தமாலா கார்யாலயத்திலிருந்து வெளிவந்த சில ஸ்ரீகோஶங்களுக்குப் பரிசோதகராகவுமிருந்தவர். இவர்க்குத் திருக்குமாரர்கள் இருவர். இவருடைய பிரிவினால் பண்டிதவுலகுக்குப் பெருத்த நஷ்டமே. அடியேனுக்கு *பால்யாத்ப்ரப்ருதி ஸாஸ்நிக்தர். திருநக்ஷத்திரம் 86.

2. ஸ்ரீமதுபயவே. வித்வான். சித்ரகூடம். விஜயராகவாசாரியர் ஸ்வாமி சென்ற வாரத்தில் திருவரங்கம் பெரிய கோயிலில் திருநாடலங்கரித்தார். இந்த ஸ்வாமி நெடுங்காலம் தில்லைத் திருச்சித்திரகூடத்தில் வாழ்ந்தவர். அப்போது ஸ்ரீமதுபயவே. நியாயவேதாந்த வித்வான். அஷ்டகோத்ரம். வேங்கடாசார்ய ஸ்வாமி ஸன்னிதியில் காவ்ய நாடகாலங்காரங்கள் வாசித்து, அப்போது அங்கே யெழுந்தருளியிருந்த (வைகுண்டவாஸி) திருநாராயணபுரம் திருமலை அனந்தாண் பிள்ளை. கோவிந்தப்பங்கார் ஸ்வாமி ஸன்னிதியில் பகவத் விஷயமும் ஸ்ரீவசனபூஷணாதிரஹஸ்யங்களும் ஸேவித்தவர் ஏறக்குறைய இருபது ஸம்வத்ஸரகாலமாக ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி. ஆண்டவன் ஆச்ரமத்தில் (ஸ்ரீரங்கத்தில்) வாழ்ந்துவந்தார். சென்ற கார்த்திகை மாதத்தில் அடியேன் நம்பெருமாள் திருவத்யயநோத்ஸவம் ஸேவிக்கக் கோயிலுக்கு விடைகொண்டிருந்தபோது ஸந்தித்து நெடும்போது வார்த்தையாடிக்கொண்டிருந்தோம். முன்னே ப்ரஸ்தாவித்த அ. மு. ஸ்ரீநிவாஸாசாரியர்ஸ்வாமியைப்போலவே இந்த ஸ்வாமியும் அடியேனுக்கு ஐம்பது வருஷகாலமாக உள்ளும்புறமுமொத்த ஸ்நிக்தராயிருந்தவர். ஆப்தர்களிருவரை ஸமீப காலத்தில் இழந்தேன். ... ... ... *

நிகழும் தை மாதத்து ந்ருஸிம்ஹப்ரியா பத்திரிகையில் வெளிவந்த கட்டுரை.

# "மஹநீயரின் மஹோபகாரம்"

ஸமீபகாலமாக நடந்துவந்த விவாதம் பூர்த்தி பெற்றுவிட்டது. மஹாமஹோபாத்யாய ஸ்ரீ பிரதிவாதிபயங்கரம் ஸ்வாமி நமது தர்சனத்துக்குச் செய்துவரும் பேருபகாரங்களில், ப்ரக்ருத விவாதத்தை மிகச்சிறந்தமுறையில் பூர்த்திசெய்வித்ததே தலைசிறந்த மஹோபகாரமாகும். இதனால் ஆஸ்திக உலகம் அடையும் இன்பத்துக்கு எல்லை இராது. மிகச் சிறியனான அடியேனுடைய பிரார்த்தனையை ஏற்று, விவாதத்துக்கு மிகவும் நல்லதொரு முடிவு கட்டிய ஸ்ரீ பிரதிவாதிபயங்கரம்

ஸ்வாமி ஸந்நிதியில் அடியேனுடைய ப்ரமணங்களையும் க்ருதஜ்ஞதையையும் விஜ்ஞாபித்துக்கொள்கிறேன்.

ஸ்ரீ பிரதிவாதிபயங்கரம் ஸ்வாமி செய்துவரும் உபகார பரம்பரையில் இதோ சில—

1. 'மணவாளமாமுனிகள் டைரி'—இந்த டைரியின் தொகுப்பாளர் ஸ்ரீ பிரதிவாதிபயங்கரம் ஸ்வாமி. மணவாள மாமுனிகளின் மஹோத்ஸவத் தொடக்கத்தன்று (29–10–75) இந்த டைரி வெளியிடப்பட்டது. தினப்படி திதி நக்ஷத்ராதிகளைத் தெரிந்துகொள்வதற்கு மாத்திரமல்லாமல் தேவப்பெருமாள் ஸந்நிதி உத்ஸவ விசேஷங்களையும் தெரிந்துகொள்வதற்கு இது மிகவும் உதவியாக இருக்கும். ஸ்ரீ மணவாளமாமுனிகள் விஷயமாக ஸ்ரீ பிரதிவாதிபயங்கரம் ஸ்வாமி அருளிச்செய்திருக்கும் 'ஸ்ரீசைலேச பாதுகாஸஹஸ்ர'த்திலிருந்து ஒவ்வொரு ச்லோகம் சுருக்கமான உரையுடன் ஒவ்வொரு தேதியில் இடம் பெற்றிருப்பது விசேஷ அம்சம். இரு கலையைச் சார்ந்த பல மஹநீயர்களின் திருவுருவப் படங்களும் இதில் இடம் பெற்றிருக்கின்றன. ஸ்ரீ அண்ணா ஸ்வாமியின் திருவவதார தினமாகிய பங்குனி விசாகத்தன்று (20—3—76) நள வருஷடைரி வெளியாகும் என்று தெரிகிறது. அனைவரும் வாங்கிப் பயன்பெறவேண்டிய டைரி இது. இதன் விலை இரண்டு ரூபாய். இது கிடைக்கும் இடங்கள்—1. க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்-3. 2. 213, கோவிந்தப்பநாயக்கன் தெரு, ஜி. டி. சென்னை; 20, தென்னண்டை மாட வீதி, திருவல்லிக்கேணி, சென்னை-5.

2. உபந்யாஸக ஸௌபாக்ய நூல்களின் தொகுப்பு.

அண்ணாஸ்வாமி நூல் தொகுதி—முதற்பகுதி சேலம் செவ்வாய்ப்பேட்டை ஸ்ரீமான் காஞ்சீபூர்ணன் என்பவரும், ஸ்ரீமான் சடகோபன் என்பவரும் பெரியோர்களின் உதவியைக் கொண்டு தொகுத்து வெளியிட்ட நூல் இது. ஸ்ரீ பிரதிவாதி பயங்கரம் ஸ்வாமி அருளிச்செய்த பல பல நூல்களிலிருந்து ஸம்ஸ்க்ருத வேதாந்த ஸாரார்த்தநிதி, த்ராவிட வேதாந்த ஸாரார்த்த மஹாநிதி, மநுதர்மசாஸ்த்ர மஹார்த்தநிதி, க்ருஷ்ணயஜுர்வேதார்த்த விசேஷ விமர்சநம், யதீந்த்ர-யதீந்த்ர ப்ரவண ஸாம்யம் என்ற ஐந்து விஷயங்களைத் தொகுத்து இந்த முதற் பகுதியில் பிரசுரித்திருக்கின்றனர். இது பிரபல உபன்யாஸகர்களுக்கும் மிகவும் பயன்படக்கூடியது. இதன் விலை இரண்டு ரூபாய். கிடைக்கும் இடம்—சேலம் செவ்வாய்ப்பேட்டை, ஜெமினி ஆர்ட் பிரஸ்.

இப்படிக்கு,

திருக்கள்ளம் நரஸிம்ஹராகவதாஸன்.

## ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியா பத்ராதிபரான ஸ்ரீமதுபயவே, திருக்கள்ளம் ஸ்வாமி ஸந்நிதியில் விஜ்ஞாபனம் P. B. A.

தேவரீருடைய பொன்மொழிகளை ஸ்ரீராமாநுஜன் வாசகர்களும் வாசித்துக் களிக்கவேணுமென்பதற்காகவே இஃது இங்குப் பிரசுரிக்கப்பட்டது. கலியுகம் நீங்கி கிருதயுகம் புக்கதென்று மகிழ்வோம். இம்மகிழ்ச்சி நீடூழி திகழ வேணும்.....

# காலக்ஷேப சக்ரவர்த்தி!

[செயலாளர், ஸ்ரீ வைஷ்ணவ மஹாசங்கம்]
நா. வேணுகோபால நாயகர், பி. ஏ., பி. எல்., வழக்கறிஞர் எழுதுகிறார்—
[14—1—76 திருப்பாவை சாத்துமுறையில் தாம் பேசியது]

ஸ்ரீரங்கமன்னார் திருவடிகளிலும் அன்னவயற்புதுவை ஆண்டாள் திருவடிகளிலும், நமது ஸ்வாமி ஜகதாசார்யசிம்மாஸனாதிபதி மஹாமஹோபாத்யாய பாரத பண்டித பத்மவிபூஷண திருப்பாவைப் பெருக்கர் நம் ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் சுவாமிகள் திருவடிகளிலும், சத் காலக்ஷேப சபையாரின் இப்பாவைக்களத்தில் கூடியிருந்து குளிரும் கோஷ்டியாருடைய திருவடிகளிலும் அடியேன் அடிவீழ்ச்சி விண்ணப்பம்! வணக்கம்!

இருள் இரிந்த, இடர்தவிர்ந்த இவ்வின்பமிகு இராட்சத ஆண்டிலே செங்கண்திருமுகத்துச் செல்வத்திருமாலின் திருவருளாலே, ஆழிமழைக்கு அண்ணன் ஒன்றும்கைகரவாது, ஆழியுள்புக்கு முகந்துகொடு ஆர்த்து ஏறி ஊழிமுதல்வன் உருவம் போல் மெய்கறுத்து பாழியந்தோளுடைப் பற்ப நாபன்கையில் ஆழிபோல் மின்னி வலம்புரிபோல் நின்று அதிர்ந்து தாழாதே சார்ங்கம் உதைத்தசரமழைபோல் வாழ உலகினில் பெய்திட்டருளினது அற்புதம்! ஆச்சரியம்!!

கோதுகலமுடைய இந்தச் சூழ்நிலையிலே நம் ஸ்ரீராமாநுஜதரிசன ஆழிமழைக்கு அண்ணர் ப்ரதிவாதி பயங்கரம் அண்ணர் தமக்குத் திருமேனிப்பாங்கு இல்லாத போதும் ஒன்றும் கைகரவாமல் சொல்லார்தமிழ்ஒருமூன்றும், சுருதிகள் நான்கும் எல்லையில்லா அறிநெறியாவுமான ஆழியுள்புக்கு மின்இலங்கு திருவுருவும், பெரிய தோளும் காட்டி சிங்கநாதம்போன்ற தம்மிடற்றோசையால் வலம்புரிபோல் நின்றதிர்ந்து சண்டமாருதம் எனப்பெருகும் கருத்துக்களாலே தாழாதே சார்ங்கம் உதைத்த சரமழைபோல் இச்சத் காலக்ஷேபசபையின் பாவைக்களத்திலே இந்த இன்பமிகு இராக்ஷத ஆண்டில் மார்கழித்திங்களை மதிநிறைந்த நன்னாளாக்கி திருப்பாவை திவ்ய காலக்ஷேபவாரியை முப்பது நாட்களும் தப்பாமல் பெய்தருளிய தற்காகப் பல்லாண்டு பல்லாண்டு.

நம் சத்காலக்ஷேப சபையினர் நமது ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் ஸ்வாமிகட்கு இவ்வாண்டு பல்லாண்டுபாடுவதில் தனித்த காரணமும் உண்டு. இவ்வாண்டிலே நமது ஸ்வாமிகள் புனர்அவதாரம் எடுத்தருளியதை யாவரும் அறிவோம். அறியாதாரும் அறியச்சொல்லுகிறேன்.

சென்ற ஆனந்த ஆண்டு மார்கழித்திங்களில் நமது ஸ்வாமிகள் திருப்பாவைக் காலக்ஷேப விழாவினை ஒருவாறு தலைக்கட்டிவைத்து கல் உயர்ந்த நெடுமதில் சூழ் கச்சியம்பதிக்கு மீண்டும் எழுந்தருளியபிறகு அவரதுதிருமேனிப்பாங்கு மிகவும் பாதிக்கப் பட்டுவிட்டதாகச் சென்னைக்கு தினந்தினமும் மணிக்கு மணியும் சேதிகள் எட்டியபோது இச் சத்காலக்ஷேப சபையைச் சேர்ந்த நம்மில் பலர் நெஞ்சு உருகிக் கண்பனிப்ப நின்றோம், சோர்ந்தோம், நெடிதுயிர்த்தோம், உண்டறியோம், உறக்

கம்நீத்தோம்; அகம் கரைந்து அத்தியூர் சென்று அதுசமயம் அண்ணங்கராசாரிய ஸ்வாமிகளை அடியேனும் சேவிக்க நேர்ந்தது. அப்போது அடியேனுடைய மனதில் ஊடுருவிப் பாய்ந்துவிட்ட ஒரு நிகழ்ச்சியை விண்ணப்பிக்க விரும்புகிறேன்.

தையில்மகம் அன்று தாரணியில் துய்யமதிபெற்ற மழிசைப்பிரான் பிறந்தார் என்றும் "பெருமாள் சொன்னவண்ணம் செய்தார்" என்றும் பாலாற்றின் கரையினிலே நற்றவர்கள் கொண்டாடும் நாளைச் சேவிக்க நமது சத்காலக்ஷேப சபையின் செயலர் திரு A. V. கன்னைய நாயுடு, தலைவர் V. ஜெகன்னாதச் செட்டியார் போன்ற பெரியார்களுடன் காஞ்சிநகரை அடைந்தோம், மழைச்சட்டடி முதற் செயலாக நமது ஸ்வாமிகளைச் சேவிக்கத் திருமாளிகைக்குள் சென்றோம். நாங்கள் கண்ட காக்ஷி நெஞ்சை நீர்ப்பண்டமாக்கிவிட்டது.

நமது ஸ்வாமிகள் கிடந்தவண்ணம் திருக்கண்வளர்ந்தருள்கிறார்: பாதகமலம் நல்லாடை, உந்தி திருமார்பு கண்டம்வரை கம்பளிப்போர்வை சாத்தப்பட்டிருந்தது. மிக்க தளர்ச்சி; நித்யாநுஷ்டானங்களும் இவ்விலைபோல் நிலை தளர்ந்துவிட்டார்... என்ன நேருமோ என்ற சொற்கள்வருகின்றன. எப் நெஞ்சம் இருபிளவாய்ப் போய்க்கொண்டிருக்கிறது. வழக்கத்தைவிட திருநெற்றியில் பெரிய திருமண் காப்பு மிளிர்கிறதே எனக் கேட்டுவிட்டேன். அதுவும் ஸ்வாமிகள் சாத்திக்கொண்டதன்று, நம்முடைய அனந்தாழ்வான் ஸ்வாமி அணிவித்தது என்று பதில் வந்தது. வார்த்தையாடாமல் வெளியேறினோம். பாலாற்றின் கரையிலே ஓர் இரவு இருக்கை விழாவைச் சேவித்துக்கொண்டு திரும்புகிறோம். நமது ஸ்வாமிகள் வீற்றிருக்கிறார்கள் மெல்லணையில்.

அடியோங்கள் காலைவந்த சமயம் தாம் அயர்ந்திருந்ததாயும் விசாரிக்க இயலாமற்போனதென்றும், ப்ரசாதவசதி கிடைத்ததா என்றும் விழாநடைபெற்ற விவரங்களை என்ன என்ன என்றும் தாயினும் அன்புடன் விசாரிக்க ஆரம்பித்துவிட்டார். பேசக்கூடாது என்று பக்கத்தில் உள்ளவர்களின் எச்சரிக்கை. ஆம்! எம்முடன் மனங்குழைய நாத்தழும்பப் பேசியபடியால் மேலும் நிலைநீர்மல்கத்தளர்கிறது. கண்ண நீர் கைகளால் இறைக்கும் நிலைமைக்கு வருகிறோம்.

இந்த சமயத்தில் நமதுஸ்வாமிகள் தமது திடசித்தத்தை வெளியிடுகின்றார்கள்; தம் திருமேனிப் பாங்கை லக்ஷ்யம் செய்யாமல் ஒருசபதம் செய்கிறார்.

வரதன் ஏன் அடியேனை இப்படி வதைத்து வாட்டவேண்டும்? திருவாய்மொழி சேவிக்கும் சுவாமிகளை எல்லாம் உடனே எழுந்தருளச் செய்யுங்கள், திருவாய்மொழி சேவையும் உடனே தொடக்கம் ஆகட்டும். தேவப்பெருமாளுக்குத் திருவுள்ளமாகில் திருவாய்மொழி சேவிக்கையிலேயே அடியேனைத் திருவடி சேர்த்தருளலாம். அங்ஙனமில்லையாகில் திருவாய்மொழி சேவையைத் தலைக்கட்டித் தீர்த்தம் ப்ரசாதம் சாதித்தருளி அடியேனுடைய ஸ்ரீவைஷ்ணவ தரிசனக் கைங்கர்யத்தைத் தலைக்கட்டவேணும் என்றார்.

சில நிமிடங்களில் அத்யாபக ஸ்வாமிகளும் எழுந்தருளினார்கள், நமது ஸ்வாமிகளும் வலது கரத்திலே மஞ்சள் துணியில் பணமுடிந்து கட்டப்பட்டுள்ள கங்கணத்துடன் கோஷ்டியினரை நோக்கி புணர்த்த கையினராய் 'சாதித்தருளாய்,

ஸ்ரீ சைலேச தயாபாத்ரம்' எனத் தொடக்கமும் செய்தருளிக் கலையொழிந்தார். மயிர்க்கூச்சலிட்டு நிற்கும் அடியேனது காதுகளில் நமது ஸ்வாமி திருவாக்கா கேட்டது? இல்லை! இல்லை!!

சென்னியோங்குதண் திருவேங்கட முடையாய் உலகு
தன்னைவாழநின்ற நம்பீ தாமோதரா சதிரா
என்னையுமென் உடைமையையுமுன் சக்கரப் பொறியொற்றிக்கொண்டு
நின்னருளே புரிந்திருந்தேன் இனியென் திருக்குறிப்பே.

என்ற வேயர்தங்கள் குலத்துதித்த விட்டுசித்தரின் திருவாக்கே கேட்டது.

அத்தனாகி அன்னையாகி ஆளுமெம்பிரானுமாய்
ஒத்தொவ்வாத பல்பிறப்பொழித்து நம்மை யாட்கொள்வான்
முத்தனார் முகுந்தனார் புகுந்து நம்முள் மேவினார்
எத்தினால் இடர்க்கடல் கிடத்தி ஏழை நெஞ்சமே.

என்ற இடங்கொண்ட கீர்த்திமழிசைக் கிறைவனின் திருவாக்கே என் செவிகளில் கேட்டது.

அணியார் பொழில்சூழ் அரங்க நகரப்பா
துணியேன் இனிநின் அருளல்லதெனக்கு
மணியே! மணிமாணிக்கமே! மதுசூதா!
பணியாய் எனக்குய்யும் வகை பரஞ்சோதீ!

என்ற மன்றில் புகழ்மங்கை மன்கலிசன்றி சொல்லே என் காதுகளில் கேட்டது.

"மின்னின் நிலையில மன்னுயிராக்கைகள், என்னுமிடத்து இறை உன்னுமின் நீரே" என்ற சேர்த்தடத் தென் குருகூர்ச் சடகோபன் சொல்லைத் திருப்பிச் சொல்லும் கிளிப்பிள்ளையை அடியேன் காணவில்லை. அதை செயல்படுத்திக் காட்டும் ஸ்ரீவைஷ்ணவச் செம்மலான ஜகதாசாரிய சிம்மாசனாதிபதியையே சேவித்தேன்.

நமது ஸ்வாமிகளுக்கு இந்த சத்காலக்ஷேப சபையினர் முன்னொரு சமயம் "நம் திருப்பாவைப் பெருக்கர்" என்ற விருதைச் சமர்ப்பித்துள்ளனர். இரட்சித்த இந்த இராட்சத ஆண்டிலே நமது சுவாமிகள் புனர் அவதாரம் எடுத்தருளியபடியினாலே இன்னும் ஒரு புதியவிருதையும் இந்த சத்காலக்ஷேப சபையின் சார்பிலே சமர்ப்பிக்க முற்படுகிறேன்.

ஆழ்வார்களின் அருளிச்செயல்களுக்கு ஈடுஇணையற்ற வியாக்கியானப் பேருரைகளை பெரியவாச்சான் பிள்ளை தம் ஆசாரியரான நம்பிள்ளையின் நியமனத்தினால் சாதித்தருளினார். இப்பேருபகாரத்திற்காக ஸ்ரீவைஷ்ணவ உலகம் பெரியவாச்சான் பிள்ளையை வியாக்கியான சக்ரவர்த்தி என்ற விருது சாற்றிப் போற்றிவருகிறது.

இராமானுஜதரிசனத்தை காலக்ஷேபங்கள் மூலம் விளங்கச் செய்வதில் நமது காஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் ஸ்வாமிகட்கு ஒப்பாரும் இலர், மிக்காரும் இலர். இக்காலக்ஷேபத்திறமையிலும் சேவையிலும் நமது சுவாமிகளுக்கு நிகர் நமதுஸ்வாமிகளே! எனவே பண்பட்ட பக்தியில் மேம்பட்ட மிக்க பெரும் இச்சபைநடுவே நமது ப்ரதிவாதிபயங்கரம் காஞ்சீ ஸ்ரீமத் அண்ணங்கராசாரிய ஸ்வாமி

களுக்கு "காலக்ஷேப சக்ரவர்த்தி" என்ற விருதை சமர்ப்பிக்கிறேன். ஸ்ரீமந் நாராயணனுக்கு கோவிந்தபட்டாபிஷேகம் செய்து உவந்த ஸ்ரீஆண்டாளின் அடிச் சுவட்டை யொட்டி அளிக்கப்படும் காலக்ஷேபசக்ரவர்த்தி என்ற இவ்விருதையும் நமது ஸ்வாமிகள் அங்கீகரித்தருளும்படி இவ்வின்பமிகுபெருங் குழுவின் சார்பிலே சிரம் தாழ்த்திக் கரம் குவித்து வேண்டுகின்றேன்.

இந்த சத்காலட்சேப சபையின் ஆதரவில் நடைபெறும் நமது சுவாமிகளின் திருப்பாவைக் காலட்சேப வேள்விக்கு இரண்டு தனித்த சிறப்புகள் உண்டு! இவை நாடும் நகரமும் நன்கறிந்தவை!

ஒன்று, நமது சுவாமிகளின் திருப்பாவைக் காலட்சேபத்திற்கு தாமதிக்காமலும், தவறாமலும் தினமும் திரள்திரளாக எழுந்தருளும் பெண்படையார்களுடைய பெருங்கூட்டம்! இவர்கள் முன்னதாகவே வந்து, முற்றுகையிட்டு, பாதியிடத்திற்குமேல் பறித்துக்கொள்ளக்கூடாதென்ற பரம கருணையுடன், பக்கத்திலுள்ள மாடங்களிலும், கீழேயுள்ள கூடங்களிலும் பரவிக் கூடிக் குழுமிக் கொட்டாரம் அடித்துக் கொள்ளுகின்றனர்!

குழலை வென்ற குளிர் வாயினராகிச் சாது கோட்டியுள் கொள்ளப்பட்டுள்ள இந்த ஸ்ரீ ஆண்டாள் கோஷ்டியினரை,

"நாவலம் பெரிய தீவினில் வாழும் நங்கைமீர்களிதோ ரற்புதங் கேளீர்!
தூவலம் புரியுடைய திருமால் தூய வாயிற் குழலோசை வழியே,
கோவலர் சிறுமியர் இளங் கொங்கை குதுகலிப்பஉடலுளவிழ்ந்து எங்கும்
காவ லும்கடந்து கயிறு மாலையாகி வந்து கவிழ்ந்துநின்றனரே!
என்ற குழல் முழவம் விளம்பும் புதுவைக் கோன் விட்டுசித்தன் விரித்த தமிழாலே தான் தலைவணங்கி வாழ்த்த வேண்டும்!

நமது ஸ்வாமிகளின் திருப்பாவைக் காலட்சேப கோஷ்டிக்கு மற்றொரு தனிச் சிறப்புமுண்டு. அதுவே காலட்சேபம் சேவிக்கும் கோஷ்டியார், கண்களைத் திறந்து கொண்டு காதுகளை அதைவிடத் திறந்து கொண்டு, ஒரு நொடியும் வாய் திறவாமல் படுகாடு கிடந்து, அங்கம் ஆட்டமில்லாமல் எழுது சித்திரங்கள் போன்று பத்தி பூர்வமாகச் சேவிக்கும் காட்சியாகும்!
இச்சாது கோட்டியை:

சிறு விரல்கள் தடவிப்பரி மாறச் செங்கண் கோடச் செய்யவாய் கொப்பளிப்ப
குறுவெ யர்ப்புருவம்கூட லிப்பக் கோவிந்தன் குழல் கொடூதின போது!
பறவையின் கணங்கள் கூடுதுறந்து வந்து சூழ்ந்து படுகாடு கிடப்ப
கறவையின் கணங்கள் கால்பரப் பிட்டுக் கவிழ்ந்திரங்கிச் செவி யாட்ட
என்றே வாழ்த்தவேண்டும்! [கில்லாவே!

அடியேன் பலகாலமாக நமது ஸ்வாமிகளின் காலட்சேபகம்பீரத்தையும், விரிவையும், உயர்வையும் ஆழத்தையும் ஒலிப்பதிவு செய்து பின்புள்ளாருக்கும் உதவ வேண்டுமென விண்ணப்பித்து வந்தேன். இது ஒருவாறு நிறைவேறி வருகின்றது.

அடியேன் அடுத்தபடியாக நமது ஸ்வாமிகளின் திருப்பாவைக் காலட்சேபத்தை வானொலியில் மார்கழிமுழுவதும் தினமும் ஒரு மணிநேரம் அஞ்சல் செய்து, தமிழ் கூறும் நல் உலகம் எங்கும் கேட்டுப் பயனடைய வேண்டுமென முயன்று வருகிறேன். இவ்வாசையையும் ஸ்ரீஆண்டாள் ஸமேத ரங்கமன்னார் நிறைவேற்றி வைத்தால் அடியேனுடைய ஆனந்தத்தைக் கீழ்கண்ட விதமே விண்ணப்பிப்பேன்!

புவியுள் நான் கண்டதோர் அற்புதங்கேளீர்!
பூணிமேய்க்கும் இளம் கோவலர் கூட்டத்து
அவையுள், நாகத் தணையான் குழலூத!
அமரலோகத் தளவுஞ் சென்றிசைப்ப,
அவியுணு மறந்து வானவரெல்லாம்
ஆயர்பாடி நிறையப் புகுந் தீண்டி
செவியுள் நாவின்சுவை கொண்டுமகிழ்ந்து
கோவிந்தனைத் தொடர்ந்து என்றும் விடாரே!

வானொலியில் தினமும் அஞ்சல் செய்யும் இந் நன்நாளை அடுத்த நள ஆண்டு மார்கழித் திங்களிலாவது கொண்டாடிக் குதூகலிப்போமாக!

கடைசியாக ஒரு விண்ணப்பம். இந்த இன்பமிகு இராட்சத ஆண்டிலே (50வது) ஸ்ரீவைஷ்ணவப் பொன்விழா மாநாடு நமது ஸ்வாமிகளின் மங்களாசாசனத்துடன் தொடக்கமாகி இனிது நடைபெற்றது. அதாவது 1925ல் தொடங்கப்பட்ட ஸ்ரீவைணவ மகா சங்கம் 1975ல் தனது பொன்விழாவைக் கொண்டாடியது.

நமது ஸ்வாமிகளின் மார்கழித் திருப்பாவைக் காலட்சேப விழா 46 வருடங்களாக நடைபெற்று வருகிறது. இத்திருப்பாவைக் காலட்சேப விழாவும் தனது பொன்விழாவை நெருங்கிக் கொண்டிருக்கிறது! முன்னதாகவே நன்கு திட்டமிட்டு இதைக் கொண்டாடவேண்டியது நமது கடமையாகும்!

தமக்குக்காலட்சேப சன்மானமாகவும், நூல்கள் விற்பனை மூலமும், இதர அன்பளிப்பு வகைகளிலும் கிடைத்துள்ள பல்லாயிரக்கணக்கான நிதியில் மிகப் பெரும் பாகத்தை ஸ்ரீராமாநுச தரிசனவளர்ச்சிக்கே அர்ப்பணித்த பெருமையையுடையவர் நமது சுவாமிகள் ஒருவரே ஆவர்! வல்லப தேவபாண்டியன் அவையிலே அன்று பொற் கிழிபெற்ற பெரியாழ்வாரைப்போல, இன்று நம் சுவாமிகளும் பொன்விழா நிதியையும் அவ்விதமே பயனடையச் செய்து மகிழ்வார் என்பதில் ஐயமில்லை! எனவே பரதகண்டம்முழுவதும் முயன்று, 50வது ஆண்டு திருப்பாவைக் காலட்சேபப்பொன்விழாவைக்கொண்டாட 50ஆயிரமாவதுநிதிஎழுப்பிநன்கொடையாக நமது சுவாமிகளின் ஸ்ரீவைணவ சேவைக்கும், மேருவைஒத்த அவரது ஞானத் திறத்தும் நிரந்தரமாகத் திகழக்கூடிய ஒரு புகழ்உருவை ஏற்படுத்தவேண்டும்! நமது சுவாமிகள் காட்டியருளிய வழியைக் கடைபிடித்து திருப்பாவைக் காலட்சேபம் புரிந்து வரும் 50 சுவாமிகளை அதுசமயம் சவுரவிக்கவேண்டும்! 2 திருப்பாவைப் பாடல் போட்டி, வியாக்கியான சொற்பொழிவு போட்டி, கட்டுரைபோட்டிகளை நடத்தி ஒவ்வொரு துறையிலும் 50 இளைஞர்கள் சிறுமிகளுக்குப் பரிசுகள் அளித்தல்

வேண்டும். 3 நமது சுவாமிகளின் திருப்பாவை உரையை 50 நூறுகளாவது அடக்க விலையில் மக்கள் பதிப்பாக 30 காசுகளுக்குத் தமிழ்நாடு எங்கும் வெளியிட்டு, தகுதி பெற்ற கல்லூரி மாணவமாணவிகட்கு அளித்தல் வேண்டும். 50 நூறு அரிய நூல்களைக் கொண்ட நடு ஸ்ரீவைணவ நூல் நிலையத்தை, அருளாளனின் அத்தியூரிலே நமது சுவாமிகள் திருப்பெயரால் ஏற்படுத்தவேண்டும்!

"நாறு நறும் பொழில் மாலிருஞ்சோலை நம்பிக்கு, நான்
நூறு தடாவில் வெண்ணெய் வாய்நேர்ந்து பராவி வைத்தேன்
நூறுதடா நிறைந்த அக்கார வடிசில் சொன்னேன்"

என்ற சுரும்பார் குழல் கோதையின் திருவாக்கு பலித்தது! இத்திருப்பாவைக் களத்திலே நமது அண்ணங்கராசாரிய ஸ்வாமிகளின் திருப்பாவைக் காலட்சேப ஐம்பதாவது பொன் விழாவிற்கு ஐம்பது ஆயிரம்—பொற்காசுகள் அல்ல! முன்காலத்திய வெள்ளிக் காசுகளும் அல்ல! தற்காலத்துக் காகிதக் காசுகள் வேண்டுமென்று அடியேனும் இக்கோஷ்டியாரும் ஆண்டாள் சமேத ரங்கமன்னர் திருவடிகளில் வேண்டினால் அது பலிக்காதோ!

தூயதமிழ்மாலையால் ஸ்ரீ ஆண்டாள் ஸ்ரீவில்லிபுத்தூரிலே கண்ட கலியாணக் கனவு பலித்தது! நமது அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளுக்கு ஐம்பதாயிரம் ரூபாய்ச் செலவில், திருப்பாவைக் காலட்சேப ஐம்பதாவது பொன்விழா எடுக்க வேண்டுமென அடியேனும் இச்சபையாரும் காணும் கனவும் பலிக்கும்! பலிக்கும்! கோதையின் திருவாக்குப்படிக் விளங்கும் குறைவு ஒன்றும் இல்லாத கோவிந்தன் இப்பறையையும் தந்தருள்வானாக! வணக்கம்!

ஸ்ரீ:

## 50-ஆம் ஸ்ரீ வைணவ பொன்விழா மாநாடு

*[செயலாளர், ஸ்ரீ வைஷ்ணவ மஹாசங்கம்*

**நா. வேணுகோபால நாயகர், பி. ஏ., பி எல்., வழக்கறிஞர்.]**

சென்னை ஸ்ரீ வைணவ மகாசங்கத்தின் ஆதரவில் 50-ஆம் ஸ்ரீ வைணவப் பொன் விழா மாநாடு சென்னை உப்புட்டூர் ஸ்ரீ ஆழ்வார் செட்டியார் ராமாநுஜகூடத்தில் 27—12—75 முதல் நான்கு நாடகள் சிறப்பாக நடைபெற்றது. ஸ்ரீ வைணவ மகாசங்கத் தலைவர் **மகாவித்துவான் திரு. மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை** அனைவரையும் வரவேற்றார்.

சங்கத் தலைமைச் செயலரும், நிதி காவலருமான **திரு C சஞ்சீவி நாயுடு** ஸ்ரீமந் நாராயண ராமாநுஜ ஜீயர், ஸ்ரீபெரும்பூதூர் பேரருளாள எதிராஜ ராமாநுஜ ஜீயர், முன்னாள் முதல்வர் திரு. M. பத்தவச்சலம், ஆந்திரப் பிரதேச ஆளுநர் திரு. S. ஓபுல் ரெட்டி, ராஜ்ஜிய சபை உபதலைவர் திரு. G முரகரி, திருக்கோவலூர் ஸ்ரீ எம்பெருமானார் ஸ்ரீ பர் மடாதிபதி திரு. திருவேங்கட ராமாநுஜாச்சாரியார், முன்னாள் சென்னை உயர்நீதிமன்ற முதன்மை நீதிபதி P. N. ராசமன்னர், தமிழ்நாடு உயர் நீதிமன்ற முதன்மை நீதிபதி மாண்புமிகு திரு K. வீராசாமி, திரு டி. இராமசாமி அய்யங்கார் வழக்கறிஞர், முதலிய பெரியார்களிடமிருந்து வந்த ஆசிச் செய்திகளை வாசித்தார்.

தமிழ்நாடு உயர் நீதிமன்ற நடுவர் மாண்புமிகு திரு. S. சூரியமூர்த்தியவர்கள் பொன்விழா மாநாட்டைத் தொடங்கி வைத்தார்.



**நீதிபதி திரு சூரியமூர்த்தி கூட்டத்தைத் தொடங்கி வைக்கிறார்**



**முன்னாள் உயர்நீதிபதி திரு. N. க்ருஷ்ணசாமி ரெட்டியார் தலைமை வகித்தார்**

தமிழ்நாடு உயர் நீதிமன்ற முன்னாள் நடுவர் மாண்புமிகு திரு. N. கிருஷ்ணசாமி ரெட்டியார் பொன்விழா மாநாட்டுக்குத் தலைமை வகித்தார்.

இந்திய உச்ச நீதிமன்ற முன்னாள் நடுவர் திரு A அழகிரிசாமி, இந்தியத் தொற்பொருள் கழகத் தென்வட்ட மேற்பார்வையாளர் டாக்டர். K. V இராமன் இயற்றிய 'ஸ்ரீ வரதராசர் சந்நிதி—காஞ்சி' என்னும் அரிய ஆராய்ச்சி நூலை வெளியிட்டார்.

மாநாட்டிற்கு எழுந்தருளிய, ஜகதாசாரிய சிம்மாசனாதிபதி, மகாமகிமோபாத்தியாய, பத்ம விபூஷண, பாரத பண்டித, நம் திருப்பாவைப் பெருக்கர், பிரதிவாதி பயங்கரம், காஞ்சீ ஸ்ரீ அண்ணங்கராசாரிய சுவாமிகளை வரவேற்று ஸ்ரீ வைணவ மகாசங்கத்தின் செயலர் திரு. நா. வேணுகோபால நாயகர், வழக்கறிஞர், பேசுகையில் குறிப்பிட்டதாவது;—

வான்திகழும் சோலை மதிளரங்கர் வண்புகழ்மேல்
ஆன்ற தமிழ் மறைகள் ஆயிரமும்— ஈன்ற
முதல்தாய் சடகோபன், மொய்ம்பால் வளர்த்த
இதத்தாய் இராமாநுசன்!

என்பது பெரியோர் வாக்கு!

இந்த ஸ்ரீ வைணவ மகாசங்கத்தை ஈன்றதாயர்கள்:—



**ஸ்ரீமான். உ. வே P. B. அண்ணங்கராசாரியர் சுவாமிகளும், ஸ்ரீமான்கள். G கிருஷ்ணமாசாரியர் N. ஜீயப்ப ஐயங்கார், Dr. K. V ராமன் அவர்களும், *(ஸ்ரீ காஞ்சீ வரதராஜப்பெருமாள் கோவில் விஷயமான ஆராய்ச்சி நூல் வெளியிட்டவர்)***

புட்பபுரி, பரசமயக்கோளரி திரு. இராகவராமாநுசதாசர், திருப்புரம்பயம் திரு. ராமசாமி நாயுடு, அப்பா நிறுவனம் திரு கே நாராயணப்ப நாயுடு, முன்னாள் அமைச்சர் பதுமஸ்ரீ கே. வேங்கடசாமி நாயுடு, திரு ம. இராதாகிருஷ்ணப்பிள்ளை, திருமதி பண்டிதை கிருஷ்ணவேணியம்மையார் முதலிய பெரியோர்கள்.

என்னும், நமது ஸ்ரீ வைணவ மகாசங்கத்தை அன்புகூர்ந்து மொய்ம்பால் வளர்த்தருளிய இதத்தாயர் பிரதிவாதி பயங்கரம், காஞ்சி ஸ்ரீ அண்ணங்கராசாரியர் சுவாமி ஆவார்கள்! இம்மாநாடு தொடங்கிய ஒரு சில ஆண்டுகள் தவிர யுடன் மற்ற எல்லா ஆண்டு மாநாடுகட்கும் நமது P B A சுவாமிகள் பரம கருணை தவருமல் எழுந்தருளி மங்களாசாசனம் செய்தருளி நம்மை ஊக்குவித்துவருகின்றார்.

ஸ்ரீமத் சுவாமிகள் இந்த இராட்சத ஆண்டிலே புனர் ஜன்மம் எடுத்தருளினர் என்பதை யாவரும் அறிவர். ஸ்ரீமத் சுவாமிகள் நமது பொன்விழா மாநாட்டைக் கடாட்சிக்கத் திருஅருள் பயந்தமைக்கு அயர்வறும் அமரர்கள் அதிபதியான, இமையோர் தலைவனை ஸ்ரீ வரதராஜன் திருவடிகளுக்குப் பல்லாண்டு! பல்லாண்டு!! ஸ்ரீமத்சுவாமிகளுடைய அறுபதாண்டு நிறைவு விழாவை நமது ஸ்ரீவைணவ மகா சங்கத்தினர் சேவித்துக்களித்துள்ளனர்! அதன்பிறகு நடைபெற்ற சதாபிஷேக வைபவத்திலும் ஸ்ரீமத் சுவாமிகட்கும் பல்லாண்டு பாடியுள்ளனர், ஸ்ரீமத்சுவாமி களுடைய நூற்றுண்டு விழாவையும் நமது ஸ்ரீவைணவ மகாசங்கத்தினர் கொண்டாடிக் குதூகலிக்கத் தெண்ணீர்ப் பொன்னி திரைக்கையால் அடிவருடப் பள்ளிகொள்ளும் திருவரங்கன் திருவருள் புரிவானாக!

நமது சங்க முன்னாள் தலைவர் பதுமஸ்ரீ வேங்கடசாமி நாயுடு பரமபதித்த சேதியை அப்போது வடநாட்டுப் பிருந்தாவன திவ்யதேசத்தில் நமதுசுவாமிகள்

அறியநேர்ந்ததனால், இந்த ஸ்ரீவைணவ மகாசங்கமும் மாநாடும் பல்லாண்டு பல்லாண்டு நடைபெற வேணுமென்று ஸ்ரீ ஆண்டாள் சமேத ஸ்ரீ ரங்கமன்னார் திருவடிகளில் சரணாகதி செய்ததாக ஸ்ரீமத் சுவாமிகள் சென்ற மாநாட்டில் சாதித்தருளியமையைக்கொண்டே, நம் சுவாமிகள் ஸ்ரீவைணவ மகாசங்கம் மாநாட்டின்மீது கொண்டுள்ள அன்பும், ஆதரவும நன்கு புலனாகும்! ஸ்ரீமத் சுவாமிகள் இப்பொன் விழாவிற்குப் பொன்னடி சாற்றியருள அருள்பாவித்தமைக்கு ஸ்ரீ ஆண்டாள் சமேத ரங்கமன்னாருக்குப் பல்லாண்டு! பல்லாண்டு!

இது பொன்விழா! இந்த 50வது ஆண்டு நிறைவு விழாவைச் சிறப்பாகக் கொண்டாடவேண்டுமென விரும்பியமைக்கு இணங்க இப்பொன்விழா மாநாட்டின் தலைமை மேடையில், மூன்று நடுவர்களைக் கொண்ட ஒரு மும்முடி மன்றம் (Full Bench) காட்சியளிப்பதைக்காண மகிழலாம்! (வரவேற்புரை முடிவு)



திரு. வேணுகோபால நாயக்கர் அனைவரையும் வரவேற்கிறார்

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரிய சுவாமிகள் பொன் விழா மாநாட்டை மங்களாசாசனம் செய்தருளியதன் சுருக்கம் வருமாறு:—

வாழி எதிராசன்! வாழி எதிராசன்! வாழி ஏதிராசன் என வாழ்த்துவார்!—வாழிஎன வாழ்த்துவார்! வாழிஎன வாழ்த்துவார்! தாளிணையில் தாழ்த்துவார் விண்ணோர் தலை! என்று நமது மணவாள மாமுனிகள், ஆர்த்திப் பிரபந்தத் தொடக்கத்திலே தமது பொய்யிலாத திருவாக்கினாலே, போற்றி வாழ்த்தியருளுகிறார்; உலகில் நற்கதியில் விருப்புடைய தெய்வ வகுப்பைச்சார்ந்தவர்களை.

அதாவது உலகில் உயிர் வாழ்பவர்களை இரண்டு வகுப்புகளாகப் பிரிக்கலாம். ஒன்று தெய்வ வகுப்பு. மற்றையது அசுரவகுப்பு. நற்கதிக்குச் சேரவிரும்புபவர்கள் தெய்வ வகுட்பு. இந்தப் பிறவியிலேயே இருந்து உழல விரும்புபவர்கள் அசுரவகுப்பு.

அசுரவகுப்புத் தேயவும், அமரவகுப்பு ஓங்கவும் திருவருள் புரிவதன் பொருட்டுத் திருமாலிருஞ்சோலைத் திருமால், நம்மாழ்வாரைக் கொண்டு 'பண்ணார் பாடல்களும், இன் கவிகளுமான திருவாய்மொழியைப் பாடிக்கொண்டானாம்!

நண்ணு அசுரர் நலிவெய்த! நல்ல அமரர் பொலிவெய்த!
எண்ணுதனகள் எண்ணும் நன் முனிவ ரின்பம் தலைச் சிறப்ப!
பண்ணார்பாடல் இன்கவிகள் யானாய்த் தன்னைத் தான்பாடித்
தென்னா வென்னும் என்னம்மான் திருமா லிருஞ்சோலையானே!

ஸ்ரீவைணவ மகாசங்கத்தைச் சேர்ந்த நாம் அமரவகுப்பு நமக்குத் திருமாலின் மங்களாசாசனம் உண்டு! நம்மாழ்வார்மூலம் திருமாலிருஞ்சோலையான் பண்ணார் பாடல்களும், இன் கவிகளுமான திருவாய்மொழிமூலம் தூராதமனக் காதல் தொண்டர்கள் கூடிய இச்சங்கத்தை, இம் மாநாட்டை. இன்பம் தலை சிறக்க அருளுகிறான்!

இப் பொன்விழா மாநாட்டு நிகழ்ச்சிகளை நடத்திவைப்பதற்கு மூன்று பெரியார்கள்—ஒருவராக விளங்கியவர்கள் இருவர், ஒருவராக விளங்குபவர் ஒருவர்—வருகைதந்து இம்மேடையை அலங்கரிக்கின்றனர்.

மங்களாசாசனத்தில் மற்றுள்ள ஆழ்வார்கள் தங்கள் ஆர்வத்தளவு தானன்றி—பொங்கும் பரிவுடைய பெரியாழ்வாரும். பல்லாண்டு! பல்லாண்டு! பல்லாயிரத்தாண்டு! என மூன்றுமுறை மங்களாசரணம் செய்தருள்கிறார்! வேதமும், சாந்தி! சாந்தி! சாந்தி! என்று மூன்றுமுறை ஆசிகூறுகின்றது இந்த முறையிலே இங்கு வருகை தந்துள்ள மூன்று பெரியார்கட்கும் வாழ்க! வாழ்க!! வாழ்க!!! என்று மும்முறை வாழ்த்துகிறேன்!

அமரவகுப்பைச் சேர்ந்த பொலிக பொலிகவென்று பூமகள் கோன் தொண்டர் மலிவுதனைக் கண்டு வாழ்த்தினார் நம்மாழ்வார்.

தேவவகுப்பைச் சாராமல், அசுரவகுப்பில் உள்ளவர்களின் மனமாசைப் போக்கித் திருத்துவதற்கும் மாறன் சொல்லே மருந்து என்பது மணவாள மாமுனிகளின் திருவாக்கு!

பொலிக! பொலிக! என்று பூமகள் கோன் தொண்டர்
மலிவுதனைக் கண்டுகந்து வாழ்த்தி!—உலகில்
திருந்தாதார் தம்மைத திருத்தியமாறன்சொல்
மருந்தாகப் போகுமன மாசு!

அரக்கர் வகுப்பிலும், அசுரர் வகுப்பிலும் சேர்ந்தவர்களாக யாராவது இருப்பின் அவர்கள் வைகுந்தன் பூதமான அடியார்களாகிவிட வேண்டும் வேறு உய்யும் வழி அவர்களுக்கு இல்லை. இது ஒன்றுதான் உய்யும் வழியாகும்!

செய்கின்ற தென் கண்ணுக் கொன்றே! ஒக்கின்ற திவ்வுலகத்து
வைகுந்தன் பூதங்களே யாய்! மாயத்தி லெங்கும் மன்னி,
ஐயமொன்றில்லை யரக்கர் அசுரர் பிறந்தீருள்ளீரேல்
உய்யும் வகையில்லை தொண்டீர்! ஊழி பெயர்த்திடும் கொன்றே!

தமக்குப் பிறகும் அவதரிக்க இருக்கும் மகான்களைப் பற்றி மங்களாசாசனம் செய்தருள்கிறார் நம்மாழ்வார்! கலியுக ஆரம்பத்திலே நம்மாழ்வாருடைய திரு அவதாரம். மேலே வளர இருக்கும் கலியுகமும் கெடும்வகையில் கடல்

வண்ணன் தன் அடியார் அவதரிப்பார்களாம். அதனால் நரகமும் நையுமாம்! நமனுக்கு வேலையுமிராதாம்!

பொலிக! பொலிக! பொலிக! போயிற்று வல்லுயிர்ச் சாபம்!
நலியும் நரகமும் நைந்த! நமனுக்கிங் கியாதொன்று மில்லை!
கலியும் கெடும் கண்டு கொள்மின்! கடல் வண்ணன் பூதங்கள் மண்மேல்
மலியப் புகுந்திசை பாடி யாடி யுழிதரக் கண்டோம்!

நம்மாழ்வாரைச் சேவித்து நிற்கிறார் மதுரகவிகள். தம் திருவடியிலுள்ள கட்டைவிரலிலே, மதுரகவிகளுக்கு இனி அவதரித்தருளப்போகிற எம்பெருமானாரைச் சேவிக்க வைத்தாராம்.

கலியும் கெடும்! கண்டு கொண்மின்! என்று அருளிச் செய்கையிலே மதுரகவிகள் சேவித்தபடி எம்பெருமானார் நம்மாழ்வாருடைய திருவடி என்பதைத் திருவரங்கத்து அமுதனார் இராமாநுச நூற்றந்தாதியின் தொடக்கத்திலே,

பூமன்னுமாது பொருந்திய மார்பன் புகழ்மலிந்த
பாமன்னுமாறன் அடிபணிந்து உய்ந்தவன்!

என்று போற்றுகிறார்.

கடலளவாய திசை எட்டினுள்ளும் கலியிருளே
மிடைதரு காலத்து இராமாநுசன்

திருவவதரித்தால், என்ன பலன் விளையும் என்பதையும் நம்மாழ்வார் முன் கூட்டியே திருவாய் மலர்ந்தருளுகிறார்!

திரியும் கலியுகம் நீங்கித் தேவர்கள் தாமும் புகுந்து.
பெரிய கிதயுகம் பற்றிப் பேரின்ப வெள்ளம் பெருக

நாட்டில் நலன் விளையுமாம்!

இவ்விதமாகக் கலிவயல் தென்னன் குருகூர்க் காரிமாறன் சடகோபனின் மங்களாசாசன பலத்தினாலே எம்பெருமானார் தரிசனம் என்று உடையவர் காலத்திலே நம்பெருமாள் பேரிட்டு நாட்டி வைத்த நமது ஸ்ரீவைணவ தரிசனம் மிகமிகப் பொலிந்து விளங்குகின்றது. அரை நூற்றாண்டாக அரிய சேவை புரிந்து புகழ்பெற்றுள்ள இந்த ஸ்ரீவைணவ மகாசங்கமும் நம்மாழ்வாருடைய மங்களாசாசன பலத்தினால்தான் நடைபெறுகிறது என்பதில் சந்தேகமில்லை.

ஐம்பது வருட வளர்ச்சிபெற்றுள்ள இந்த ஸ்ரீவைணவ மகாசங்கம், இனியும் பெறும் அளவில் இடைவிடாது நமது ஆழ்வார்கள் ஆச்சாரியர்களின் அருளிச் செயல்களின் அடிப்படையில் ஸ்ரீவைணவ தரிசனத்தை நன்கு பரப்ப வேண்டுமென்று மகிழ்ச்சியுடன் மங்களாசாசனம் புரிகிறேன்! இவ்வளவு சிறப்பாக நடைபெறும் ஆண்டு மாநாடுகள்மட்டும் போதா! அரையாண்டிற் கொருமுறையும், கால் ஆண்டிற்கு ஒருமுறைகூட இந்த மகாநாடு இனி நடைபெற வேண்டுமென ஆசி கூறுகின்றேன்! இப் பொன்விழா வைபவத்திலே

8

சம்மான ஆடை மரியாதைபெறும் 85 பக்தர்கட்கு "கைங்கரிய ஸ்ரீமான்கள்" என்ற விருதை அளித்து வாழ்த்துகிறேன்! ஸ்ரீவைணவ மகாசங்கத்திற்கும், நாடெங்கும் பரவியுள்ள பல கிளைச்சபைகளுக்கும் பல்லாண்டு! பல்லாண்டு!

45ஆம் ஸ்ரீவைணவ மாதர் மாநாடு திருமதி பு. ஆ. கௌசல்யா வேணு கோபாலர் B SC., B T. தலைமையில் மிகச்சிறப்பாக நடைபெற்றது.

ஸ்ரீமதுபயவே. கீதாரத்னம் நல்லப்பா ஸ்ரீயப்பங்கார் (காஞ்சீபுரம்) ஸ்வாமியும், ஆராய்ச்சி வல்லுநர் Dr. K.V. இராமன் அவர்களும்.



ஸ்ரீமதுபயவே. G. கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமிகள், அட்வகேட், செங்கற்பட்டு.



திருமதி. கௌசல்யா வேணுகோபாலன் மாதர் மாநாட்டின் தலைமை வகித்து உரையாற்றினர்.

அருளிச்செயல் மணி, பண் ஆராய்ச்சி வித்தகர் திருக்குடந்தை திரு. ப. சுந்தரேசனுரால் திவ்வியப்பிரபந்தப் பண் இசைக் கச்சேரி நடத்தப்பட்டது.

பல முக்கியமான விஷயங்களைப்பற்றி நிறைவேற்றப் பட்ட தீர்மானங்கள் தினசரிப்பத்திரிகைகளில் வெளியாகி உள்ளன.

செயலர் திரு. தி. ம. புருஷோத்தம ராமாநுச தாசர் வந்தனோபசாரம் கூற மாநாடு இனிது நிறைவுற்றது. ... எங்கும் மங்கலம் பொங்குக ... ... *

# ஸ்ரீ வைஷ்ணவ ஸேவா ஆச்ரமம் (ஒரு வேண்டுகோள்)

அரசாங்கத்தில் பெரிய பதவிகளில் அமர்ந்திருந்து வெகுகாலம் பணியாற்றி வயது முதிர்ந்தவாறே ஓய்வுடன் உபகாரச் சம்பளமும் பெற்றுவரும் பெரியோர்கள் பலர் திவ்யதேசங்களில் குடியிருந்து நல்ல விஷயங்களைக் கேட்டும் முடிந்தவற்றைக் கற்றும் குணாநுபவம் செய்தும் ஸம்பிரதாயத்திற்குத் தங்களால் இயன்ற தொண்டு புரிந்தும் பொதுபோக்க விருப்புகிறார்கள். ஆனால் அவர்களுக்கு அதற்கு வேண்டிய ஸவுகரியங்கள் வாய்ப்பதில்லை. அன்னவர்களுக்கு உதவ இக் காஞ்சி மாநகரில் ஒரு ஸேவா ஆச்ரமம் அமைக்கப் பல ஆப்தர்களின் கருத்தின்படி விரும்புகிறோம். இதில் சேருபவர்கட்டு இருப்பதற்கு இடம், ஆகாரம், தகுந்த வித்வான்களைக் கொண்டு உபயுக்த வேத திவ்யப்ரபந்த ஸ்தோத்திர பாகங்கள், உபயவேதாந்தக்ரந்த ரஹஸ்யார்த்தங்கள், இவற்றைக் கற்றுக்கொள்ளவும், தினப்படி பாராயணம் முதலிய நற்போதுபோக்குக் காரியங்கள் செய்யவும், மற்றும் அவ்வப்பொழுது அவசியமான லௌகிகவைதிக காரியங்கள் செய்யவும் போதுமான வசதி [எல்லா ஸவுகரியங்களும்] செய்து தரப்படும். இதற்காக ஆகும் செலவை ஆச்ரமத்திலிருப்பவர் எல்லோரும் ஸமமாக ஏற்றுக்கொள்ள வேணும். ஒருவருக்கு ஏறக்குறைய மாதம் ரூ. 250/- செலவாகலாம் ஓய்வு பெற்றவர்கள் மட்டுமல்ல; நல்லவிதமாகப் பொழுதுபோக்கவிரும்பி தங்கள் செலவைத் தாங்களே ஏற்றுக்கொள்ளக்கூடிய மற்றவர்களும் இதில் சேரலாம்.

இதற்காக ஒரு சங்கம் அமைக்கப்படும். ஆச்ரமத்திற்குச் சேருபவர் யாவரும் அதின் அங்கத்தினர் ஆவர். இவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு சிறிய குழு ஆச்ரமத்தின் நிர்வாஹத்தையெல்லாம் ஒழுங்காக கவனித்து வரும். ஒரு சமையற்காரரும் மற்றும் அவசியமான இரண்டொருசேவகரும்தான் சம்பளத்திற்கு நியமிக்கப்படுவார்கள். வீண் செலவும் வெளியாரின் ஆதிக்கமும் இல்லாமல் ஆச்ரமவாஸிகளே தங்களுக்குள் முறை வைத்துக்கொண்டு மேல் பார்வை வரவு செலவு முதலிய எல்லாவற்றையும் ஒழுங்காகவும், எல்லோருக்கும் மகிழ்ச்சியுண்டாகும்படியும் நடத்துவர்கள். இவ்வாச்ரமத்திற்கு வெளியாரிடம் கூடுமான வரையில்யாதொரு உதவியும் எதிர்பார்க்கவேண்டியதில்லை. பணவசதி யுள்ளவர்களே இதில் சேர்த்துக்கொள்ளப்படுவதால் பணத்திற்காக பிறரை நாடவேண்டியஅவசியமில்லையன்றோ? அதேபோல் ஆச்ரமம் நடத்தி அதனால் யாரும் லாபம்பெறமாட்டார்கள். நாளடைவில் இது ஆடம்பரமற்ற சிறந்ததொரு தர்ம ப்ரசார ஸபையாக அமையவேணுமென்பதே முக்கியமான நோக்கு.

10—15 நபர்களாவது சேர்ந்தால் தான் இக்காரியத்தைத் தொடங்கமுடியும். இதில் விருப்பமுள்ளவர்கள் எங்களுக்குத் தெரிவித்தால், பிறகு ஒருநாள் அன்னாரையெல்லாம் ஒன்று கூட்டி ஸபையை ஸ்தாபித்து, அதின் நியமங்களை அமைத்து, சீக்கிரத்தில் ஆச்ரமத்தை ஆரம்பிக்கலாம்.

ஆகையால் இதில் சேர விரும்பும் பெரியோர்கள் தங்களைப் பற்றின முழு விவரங்களுடன், இது விஷயமாகத் தங்கள் கருத்துக்களையும் எமக்குத் தெரிவிக்க வேண்டுமாய்க் கேட்டுக்கொள்கிறோம். இதில் சேருமவர்கள் தனியாகவும் இருக்கலாம். தம்பதிகளாகவும் இருக்கலாம். தாங்கள் தனிக்குடும்பமாக விருந்துகொண்டு மற்றபடி ஆச்ரமத்தின் நற்காரியங்களில் பங்கு கொள்ள விரும்புமவர்களும் இதில் சேரலாம். 1976 பிப்ரவரி மாத முடிவிற்குள் கீழ்க்கண்ட மூகவரிக்கு அவரவர்கள் எழுதிக்கொள்க.

இப்படிக்கு,

*R.* அனந்தாசாரியர், (Retd. Director of Civil Supplies, Pondichery)
9, கீழண்டை மாட வீதி, சின்ன காஞ்சீபுரம்-631503.)

If un-delivered please return to :

P. B. ANNANGARACHARYA,

KANCHIPURAM Pin Code-631503

To

Sriman / Srimathi

P. A. Thiruvenkatacharya,
10, N.M. Gandhi Street,
Sriperumbudur.



Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Sathgrantha Prakasana Sabha.

Wrapper Print Sri Kamakshi Press, Kanchipuram-3.